உய்வதனைத்திலு மொன்ருய்—எங்கும்
ஓர் பொருளானது தெய்வம்.

4. அன்பென்று கொட்டு முரசே— மக்கள்
அத்தனைபேரும் நிகராம்;
இன்பங்கள் யாவும் பெருகும்—இங்கு
யாவரு மொன்றென்று கண்டால்

5. ஒன்றென்று கொட்டு முரசே;—அன்பில்
ஓங்கென்று கொட்டு முரசே;
நன்றென்று கொட்டு முரசே—இந்த
நானில மாந்தருக் கெல்லாம்.

—சுப்பிரமணிய பாரதியார்.

1. **அரும்பொருள் :-** சீர் - நல்ல நிலைமை. வையம்- பூமி. மாந்தர் - மக்கள். முரசு - கொட்டப்படும் ஒருவகைத் தோற்கருவி.

2. **கேள்விகள் :-**
   1. உலகில் நாம் எவ்வாறு வாழ வேண்டும்?
   2. மூடர் பகைமையை எப்படி வளர்க்கிருர்கள் ?
   3. உலகில் இன்பம் எப்பொழுது பெருகும் ?
   4. உலகமக்கள் அறிந்துகொள்ள வேண்டியது என்ன ?

3. **பயிற்சி :—**
   1. இப்பாடலின் கருத்தை மூன்று வாக்கியங்களில் எழுது.
   2. கோடுள்ள இடங்களில் நிறுத்தக் குறிகளை இடு.

பாரதியார் சிறந்த தமிழ்ப்புலவர்/அவர் எட்டையா புரததில் பிறந்தார்/அவருக்கு நாட்டுப்பற்று அதிகமாக இருந்ததால்/நாட்டுப்பற்று மிகுந்த பல பாடல்களைப் பாடினர்/பாரதியாருக்கு நினைவுச்சின்னம் உண்டா/ஆம் உண்டு/எட்டையாபுரத்தில் ஒரு மண்டபமே அவருடைய நினைவுச் சின்னம்/பாரதியார் பாட்டைப் பாடினல்/அழும் குழந்தையும் ஆகா/என்று வியப்பு அடையும்/

# 22. பேராசையின் விளைவு

## (ஒரு சிறு நாடகம்)

| | | |
|---|---|---|
| வயற்புறம் | இளைப்பாறலாம் | தொலைவு |
| நெடுந்தூரம் | ஆகாரம் | கனவான் |
| பிரயாணம் | வறள்கிறது | ஐயன்மீர் |
| தருமம் | அரிந்து | நியாயம் |
| நன்றி | பரிசு | மன்னித்து |
| சச்சரவு | வஞ்சனை | தீர்ப்பு |

**காட்சி 1. காலம் - காலை நேரம்.**

[கந்தனும் சோமனும வயற்புறங்களின் வழியே நடந்து போகிருர்கள். நெடுந்தூரம் பிரயாணம் செய்த களைப்பு. ஒரு வயலில் ஒரு வெள்ளரித் தோட்டம்; அதில் பழங்கள் பல இருந்தன; அவற்றைக் கண்டு உண்ண விரும்புகிருர்கள்.]

**கந்தன்**—சோமா! நெடுந்துரம் நடந்து வந்திருக்கிறோம். பசியோ காதுகளை அடைக்கிறது; கால்கள் தள்ளாடுகின்

றன ; நிலை தடுமாறுகிறது. சற்று இங்கே இளைப்பாறலாமே!

**சோமன்**—அவ்வாறே செய்யலாம். கந்தா! எனக்கும் பசி தாங்க முடியவில்லை. ஆகாரம் ஒன்றும் காணவில்லையே! என்ன செய்யலாம்!

**கந்தன்**—சோமா! அதோ அங்கே ஒரு வெள்ளரித் தோட்டம் இருக்கிறது. அங்கே போகலாம் வா. (போகிறார்கள்)

**சோமன்**—(தோட்டத்துக்கு அருகில் வந்து) கந்தா! பார்த்தாயா? இத் தோட்டத்தில் பல பழங்கள் இருக்கின்றனவே! இவற்றை வாங்கி உண்ணலாமே!

**கந்தன்**—அப்படியே செய்வோம். தோட்டக்காரன் எங்கே?

**சோமன்**—ஐயா! தோட்டக்காரரே! தோட்டக்காரரே! (உரக்கக் கூப்பிடுகிறான்)

(தோட்டக்காரன் வருகிறான்)

**தோட்டக்காரன்**—என்ன வேண்டும், ஐயா? ஏன் கூப்பிட்டீர்கள்?

**கந்தன், சோமன்**—அண்ணே! பசி காதடைக்கிறது; நா வறள்கிறது. வெள்ளரிப் பழங்களை விலைக்குத் தருகிறாயா?

**தோட்டக்காரன்**—அதற்கென்ன? நல்ல பழங்களாகக் கொடுக்கிறேன். பெற்றுக் கொண்டு உண்டு பசியாறுங்கள்.

**கந்தன்**—எனக்கு ஐந்து பழங்கள் கொடு.
(பணம் கொடுத்துப் பெறுகிறான்)

**சோமன்**—எனக்கு மூன்று பழங்கள் கொடு.

[பழங்களைப் பெற்ற இருவரும் சாலையின் அருகே சற்றுத் தொலைவில் இருந்த ஒரு ஆலமரத் தடியில் உட்காருகிறார்கள். எதிரே குளம். இருவரும் பழங்களை உண்ணத் தொடங்குகிறார்கள்.]

### காட்சி 2. காலம் - நண்பகல்

[சற்றுத் தொலைவில் குளம்பு ஓசை கேட்கிறது. குளத்தங் கரையில் ஒரு குதிரை வந்து நிற்பதைக் கந்தனும் சோமனும் காண்கிறார்கள். குதிரையினின்று பட்டாடைகள் தரித்த கனவான் ஒருவர் இறங்குகிறார். கனவான் அவர்கள் அருகே வருகிறார்]

**கந்தன், சோமன்**—ஐயா! வணக்கம்.

**கனவான்**—வணக்கம், ஐயன்மீர்!

**கந்தன்**—ஐயா! நாங்கள் இப்பழங்களை உண்ணப் போகிறோம். தாங்களும் பசியுடன் இருக்கிறீர்கள். எங்களுடன் தாங்களும் உண்ண விரும்புகிறோம்.

**சோமன்**—நானும் அவ்வாறே விரும்புகிறேன், ஐயா!

**கனவான்**—உங்கள் இருவருக்கே இப்பழங்கள் போதாது போல் இருக்கிறதே! பரவாயில்லை. நான் சற்று இளைப்பாறுகிறேன். நீங்கள் சாப்பிடுங்கள்.

**கந்தன்**—மூவருக்கும் போதும். தய்வு செய்து உண்ண வாருங்கள். நீங்கள் பசித்திருக்க நாங்கள் உண்ணலாமா? அது தருமம் அல்லவே.

**கனவான்**—சந்தோஷம். மூவரும் உண்ணலாம் வாருங்கள்.



[கந்தன் தன் பழங்கள் ஒவ்வொன்றையும் மூன்று பாகங்களாகச் செய்கிறான். சோமனும் அவ்வாறே செய்கிறான். மூவரும் அருந்துகின்றனர்.]

**சோமன்**—ஆகா! என்ன சுவை! இந்தப் பசி வேளைக்கு இப்பழங்கள் அமிர்தம்போல், இருக்கின்றனவே!

**கனவான்**—ஆமாம்! இவை மிகுந்த சுவையுள்ள பழங்கள். உங்களுக்கு என் நன்றி, இதை என் ஆயுள் உள்ளளவும் மறவேன். இந்தாருங்கள், என் திருப்திக்காக இந்த வெகுமதியைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

(எட்டு ரூபாய்களைக் கொடுக்கிறார்.)

**கந்தன், சோமன்**—ஐயா! இச்சிறு உதவிக்குப் பணம் எதற்கு? வேண்டாம். எங்களைத் தாங்கள் மறவாதிருக்க வேண்டுகிறோம். அதுவே எமக்கு வெகுமதி,

(திருப்பிக் கொடுக்கிறார்கள்)

**கனவான்**—நண்பர்களே! வைத்துக் கொள்ளுங்கள். என் நினைவாக அதை அளித்துள்ளேன். வணக்கம். போய்வருகிறேன். (குதிரை ஏறிச் செல்கிறான்)

### காட்சி 3

**சோமன்**—இதை நாம் இருவரும் பங்கிட்டுக் கொள்ளலாம்,

**கந்தன்**—சரி நண்பா, இந்தா! உன் மூன்று பழங்களுக்கு மூன்று ரூபாய்கள். எனக்கு மிகுதியான ஐந்து ரூபாய்கள்.

**சோமன்**—கந்தா! இது சரியன்று. என்னை ஏமாற்றுதே. இருவரும் சமமாகப் பங்கிட்டுக்கொள்வோம்.

**கந்தன்**—சோமா! உனக்குப்பேராசைபிடித்து விட்டது. உன் பழங்கள் மூன்று; அதற்கு மூன்று ரூபாய்களே சரியான பங்கு ஆகும். அதிக ஆசை கொள்ளாதே.

**சோமன்**—முடியாது. எனக்கு ரூபாய் நான்கு கொடு.

**கந்தன்**—மாட்டேன். வா. அடுத்தஊரிலுள்ள நீதிபதியிடம் போகலாம். அவர் நமது சச்சரவைத் தீர்த்து வைப்பார்.

**சோமன்**—அப்படியே! வா போகலாம்.

(இருவரும் போகிறார்கள்)

**காட்சி 4. காலம் - மாலைநேரம்**

*[நியாயஸ்தலம், நீதிபதி, கந்தன், சோமன்]*

**நீதிபதி**-கந்தா! சோமா! உங்கள் வழக்குயாது?

**கந்தன்**—ஐயா! ஒரு கனவானுக்கு நாங்கள் உண்ணப் பழங்கள் அளித்தோம். என்னிடம் ஐந்து வெள்ளரிப்பழங்களும் சோமனிடம் மூன்றும் இருந்தன. ஒவ்வொன்றையும் மூன்று மூன்றாக அரிந்து மூவரும் உண்டோம். கனவான் எட்டு

ரூபாய் பரிசு அளித்தார், அதில் சோமனுக்கு மூன்று ரூபாய் அளித்தேன். அவன் சரி பாதி சேரவேண்டும் என்கிருன்.



**நீதிபதி**—சோமா! மூன்று ரூபாய் பெற்றுக் கொள்ள உனக்கு மனம் இல்லையா?

**சோமன்**—இல்லை ஐயா! எனக்குச் சரி பாதிப் பணம் வேண்டும். தாங்களே தீர்ப்புச் சொல்லுங்கள்.

**நீதிபதி**—சந்தோஷம். (ஏழு ரூபாய்களைக் கந்தனிடம் கொடுக்கிருர்.)

(மீதி ஒரு ரூபாயைச் சோமனிடம் கொடுக்கிருர்.)

**சோமன்**—ஐயா! இது என்ன தீர்ப்பு? கந்தனே எனக்கு மூன்று ரூபாய் கொடுத்தானே! தாங்கள் ஒரு ரூபாய் மட்டும்

கொடுக்கிறீர்களே? இது நியாயம் அல்லவே. தாங்கள் வஞ்சனை செய்கிறீர்கள்.

**நீதிபதி**—இது வஞ்சனை யல்ல; நியாயமே ஆகும். மூன்று பழங்கள் உன்னுடையவை. கந்தனுடையது ஐந்து. மொத்தம் எட்டு பழங்கள். ஒவ்வொரு பழத்தையும் மூன்று துண்டுகளாக்கினீர்கள்; மொத்தம் இருபத்து நான்கு துண்டுகள் ஆயின. நீங்கள் மூவரும் ஆளுக்கு எட்டுத் துண்டுகள் உண்டீர்கள். நீயும் எட்டுத் துண்டுகள் அருந்தினுய்; உன் பழங்களில் மீதி ஒரு துண்டுதான். அதை அச் செல்வர் உண்டார்; மிகுந்த ஏழு துண்டுகள் கந்தனுடையவை. அவர் உண்ட எட்டுத் துண்டுகளுக்கு எட்டு ரூபாய்கள் கொடுத்தார். அதில் உனக்கு ஒரு துண்டுக்கு ஒரு ரூபாய்; கந்தனுடைய ஏழு துண்டுகளுக்கு ஏழு ரூபாய்கள். இப்பொழுது தெரிந்ததா?

**சோமன்**—தெரிந்தது ஐயா! தங்கள் தீர்ப்பு நியாயமே. (தனக்குள்) பேராசையால் மோசம் போனேன்; இனிப் பேராசை கொள்ளேன். (வெளிப்படையாக) கந்தா! என்னை மன்னித்து விடு.

(இருவரும் போகிருர்கள்)

1. **அரும்பொருள் :—**
நெடுந்தூரம்-மிகத் தொலைவு. ஆகாரம் - உணவு, வருள்கிறது - வறட்சி அடைகிறது. சச்சரவு-சண்டை. அரிந்து - அறுத்து. பரிசு - வெகுமதி

2. **கேள்விகள் :—**
   1. கந்தனும் சோமனும் வெள்ளரித் தோட்டத்திற்கு ஏன் சென்றார்கள்?
   2. அவர்களுடன் யார் உணவு அருந்தியது?
   3. கனவான் அளித்த வெகுமதி என்ன?
   4. கந்தனும் சோமனும் ஏன் சண்டைபோட்டார்கள்?
   5. நீதிபதியின் தீர்ப்பு என்ன?
   6. சோமன் எவ்வாறு மோசம் போனான்?

3. **பயிற்சி.**
   1. எதிர்ப்பதங்களை எழுது :- தருமம், சச்சரவு, நியாயம், கொள்ளேன், மறவேன், போதாது.
   2. இச்சிறு நாடகத்தைக் கதை உருவில் எழுது.

4. **இலக்கணம் :-** கீழுள்ள வாக்கியங்களில் காலத்தைத் திருத்து—
   1. கனவான் நேற்று இங்கே வருவார்.
   2. கந்தனுக்கு நாளைக்கு கலியாணம் நடந்தது.
   3. நீதிபதி நேற்றுத் தீர்ப்பு அளிப்பார்.
   4. இன்று நான் மங்களூர் சென்றேன்.
   5. நாளைக்கு நாங்கள் இந்தக் கதையை நடித்தோம்.

# 23. செய்யுள் பாடம்

## தமிழ் மொழி வாழ்த்து

1. வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ் மொழி
வாழிய வாழியவே!
வான மளந்த தனைத்தும் அளந்திடு
வண்மொழி வாழியவே!

2. ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி
இசை கொண்டு வாழியவே!
எங்கள் தமிழ் மொழி எங்கள் தமிழ்
என்றென்றும் வாழியவே! [மொழி

—பாரதியார்

## 2. நறுந் தொகை

தேம்படு பனையின் திரள்பழத்து ஒருவிதை
வான் உற ஓங்கி வளம்பெற வளரினும்
ஒருவர்க்கு இருக்க நிழலாகாதே.
தெள்ளிய ஆலின் சிறுபழத்து ஒரு விதை
தெண்ணீர்க்கயத்துட் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே ஆயினும் அண்ணல் யானை
அணிதேர் புரவி ஆட்பெறும் படையொடு
மன்னர்க்கு இருக்க நிழலாகும்மே.

## 3. வெற்றிவேற்கை

கற்கை நன்றே கற்கை நன்றே;
பிச்சைப்புகினும் கற்கை நன்றே.
கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்

நெல்லினுள் பிறந்த பதராகும்மே.
எக்குடிப் பிறப்பினும் யாவரே ஆயினும்
அக்குடியில் கற்றோரை வருக என்பர்.

—அதிவீரராம பாண்டியா

## 4. மூதுரை

### 1. செய்த உதவிக்குப் பயன் எதிர்பாராதே

நன்றி ஒருவர்க்குச் செய்தக்கால் அந்நன்றி
'என்று தருங்கொல்!' என வேண்டா-நின்று
தளரா வளர்தெங்கு தாள்உண்ட நீரைத்
தலையாலே தான் தருதலால்.

### 2. நல்லவர்க்கு உதவு

நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப்போல் காணுமே-அல்லாத
ஈரமில்லா நெஞ்சத்தார்க்கு ஈந்த உபகாரம்
நீர்மேல் எழுத்துக்கு நேர்.

### 3. நல்லோர் உறவு நலம் தரும்

நல்லாரைக் காண்பதுவும் நன்றே; நலமிக்க
நல்லார் சொல் கேட்பதுவும் நன்றே;-நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே! அவரோடு
இணங்கி இருப்பதுவும் நன்று.

### 4. மன்னனை விடக் கற்றவனே மேலானவன்

மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்-மன்
[னர்க்குத்

தன் தேசம் அல்லால் சிறப்பில்லை கற்றோர்க்குச்
சென்ற இடம் எல்லாம் சிறப்பு.

### மேன்மக்கள் தன்மை

அட்டாலும் பால் சுவையில் குன்றாது;
[அளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்;
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே;
சுட்டாலும் வெண்மை தரும். [சங்கு
—ஔவையார்

## 5. நன்னெறி

1. நீக்கம் அறும்இருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கின் அவர் பெருமை நொய்தாகும்:—பூக்குழ
நெல்லின் உமிசிறிது நீங்கிப் பழமைபோல் [லாய்!
புல்லினும் திண்மைநிலை போம்.

2. மாசற்ற நெஞ்சு உடையார் வன்சொல் இனிது
[ஏனையவர்
பேசற்ற இன்சொல் பிறிது என்க—ஈசர்க்கு
நல்லோன் எறிசிலையோ நன்னுதல்! ஒண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு?

3. பிறர்க்கு உதவிசெய்யார் பெரும்செல்வம், வேறு
பிறர்க்கு உதவி ஆக்குபவர் பேறும்:-பிறர்க்குஉதவி
செய்யாக் கருங்கடல்நீர் சென்று புயல்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு.

4. என்றும் முகமன் இயம்பா தவர்கண்ணும்
சென்று பொருள்கொடுப்பர் தீது அற்றோர்:—
[துன்றுசுவை

பூவிற் பொலிகுழலாய்! பூங்கை புகழுவோ
நாவிற்கு உதவும் நயந்து.

5. இன்சொலால் அன்றி இருநீர் வியன் உலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே:—பொன்செய்
அதிர்வளையாய்! பொங்காது அழல்கதிரால்: தண்
கதிர்வரவால் பொங்கும் கடல். [என்

—சிவப்பிரகாசர்.

## 6. நல்வழி

### 1. அறம்செய்வோர் பெரியோர்

சாதி இரண்டொழிய வேறில்லை; சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின் —மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பாட்டாங்கில் உள்ளபடி.

### 2. நல்லோர் தன்மை

ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும் அந்நாளும் அவ்
[வாறு
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்;—ஏற்றவர்க்கு
நல்ல குடிபிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லை என மாட்டார் இசைந்து.

### 3. ஈசன் செயல்

ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு ஒன்றாகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும்;—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்;
எனையாளும் ஈசன் செயல்.

## 4. வரவுக்கு மேல் செலவு கூடாது

ஆன முதலில் அதிகம் செலவானால்
மானம் அழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்கும் கள்ளனாய் ஏழ்பிறப்பும் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு.

## 5. கருமியாக இருக்காதே

பாடுபட்டுத் தேடிப்பணத்தைப் புதைத்துவைத் [துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்;—கூடு விட்டு [இங்கு
ஆவிதான் போயினபின்பு யாரே அனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம்.

—ஔவையார்

## 7. சுதந்தரத் திருநாள்

1. இந்திய நாட்டின் சுதந்தரத் திருநாள்
இன்பம் யாவையும் இனிமேல் தருநாள்;
செந்தமிழ்த் தாயின் திருப்புகழ் பாடித்
தெய்வம் தொழுவோம் யாவரும் கூடி.

2. அன்பின் ஆண்மையும் ஆற்றலும்வளரும்
அன்னை பாரதத் தாய்மனம் குளிரும்;
துன்பம்யாவையும்தொலைத்திட முடியும்
சோற்றுத் தரித்திர மாவதுவிடியும்.

3. எல்லாத் தேசமும் எமக்கினி உறவாம்
எவரும் செய்திடும் நன்றியை மறவோம்;
நல்லார் யாரையும் நலமிறக் காப்போம்
நலிப்பவர் யாவரும் நடுங்கிடப் பார்ப் [போம்.

4. சுதந்தரம் சுதந்தரம் சுதந்தரம் ஒன்றே
சுகந்தரும் சுகந்தரும் சுகந்தரும் என்றும்
பதந்தரும் பலந்தரும் பரமனைக் காணும்
பக்தியென்பவருக்கும் சுதந்தரம்வேணும்

—நாமக்கல் கவிஞர்

1. அரும்பொருள் :—

**தமிழ் மொழி வாழ்த்து ;** 1. நிரந்தரம்—என்றென்றும். வண்மொழி-வளமை மிக்க மொழி. இசை-புகழ்.

2. நறுந்தொகை :

1. தேம்படு—இனிமை பொருந்திய
2. வான்உற—ஆகாயத்தை அளாவி
4. தெள்ளிய—தெள்ளி எடுத்த
5. தெண்ணீர்—தெள் + நீர் = தெளிந்த நீர். கயம்—குளம்
6. நுண்ணிதே—சிறியதே
7. அண்ணல்—பெருமை பொருந்திய அணி - அழகு ; புரவி - குதிரை

3. வெற்றி வேற்கை :

1. கற்கை—படித்தல்.
2. குலநலம்—குலத்தின் பெருமை.

4. மூதுரை :

1. என்று தரும்—எப்பொழுது பயன் அளிக்கும். தளரா-சோர்வு இல்லாமல். தாள்—பாதம்.
2. ஈரமிலா—அன்பு இல்லாத. ஈந்த—செய்த. நேர்—சமம் ஆகும்.
3. இணங்கி-ஒன்று சேர்ந்து.

4. மாசற - குற்றம் நீங்க. சீர் தூக்கின் . ஆராய்ந்தால்.

5. சுட்டாலும் - நன்றாகக் காய்ச்சினாலும். அளவளாய்-மிகவும் நெருங்கி. நட்டாலும்-சிநேகித்தாலும்.

**5. நன்னெறி :**

1. நீக்கம்அறும்-வேற்றுமை இல்லாத. நொய்து-அற்பம். புல்லினும் - ஒன்று சேர்ந்தாலும். திண்மை - வலிமை.

2. வன்சொல் - கடுமையான சொல். பிறிது - கொடியது. எறிசிலை-வீசி எறிந்த கல். ஒண் கருப்பு-ஒள் + கருப்பு-ஒளி பொருந்திய கருப்பு.

3. வேறு-பிறிதேயானாலும். ஆக்குபவர்-செய்கிறவருடைய. பேரும்-செல்வமாகும். புயல்-மேகம். முகந்து-மொண்டு.

4. முகமன்-உபசாரவார்த்தை.துன்று-அதிகமாக. நயந்து-அன்பு கொண்டு.

5. இருநீர்-பெரிய கடலினால் சூழப்பட்ட. வியன்-பெரிய. அழல் கதிர்-சூரியன். தண்-குளிர்ச்சி. தண்என் கதிர்-சந்திரன்.

**6. நல்வழி :**

1. சாற்றுங்கால் - சொல்லுமிடத்து. பட்டாங்கில்-சாத்திரங்களில்.

2. நல்கூர்ந்தார் - தரித்திரர். இசைந்து - மனம் ஒப்பி.

3. எய்தும் - சேரும்.

**7. சுதந்தரத் திருநாள் :**

நலிப்பவர் - துன்பம் செய்பவர்.

# 24. நாட்டு வணக்கம்

1. நம் நாடு செழிக்கவேண்டும்;
நாம் எல்லாம் களிக்கவேண்டும்;
தம் நாடு மட்டும் வாழப்
பிறர் நாட்டைத் தவிக்கச் செய்யும்
வெம் நாடுகளுக்கு எல்லாம், ஓர்
விழுமிய ஞான மார்க்கம்
எம் நாடு உதவிற்று, என்று
இந்தியன் மகிழவேண்டும்.

2. தாழ்வுகள் யாவும் போகத்
தரித்திரக் கொடுமை நீங்கிச்
சூழ்கடல் உலகில் மக்கள்
சுதந்தரத்துடனே வாழ்ந்து,
ஆழ்கலை அறிவும் ஓங்கி,
ஆண்டவன் அன்பைக் கண்டு,
வாழ்ந்திட வேண்டும் என்றே
நம் நாடு வாழவேண்டும்.

—நாமக்கல் கவிஞர்

**அரும்பொருள் :**

வெம் நாடு—கொடிய நாடு.
விழுமிய—மேலான.
ஆழ்கலை—ஆழ்ந்த கருத்துக்கள் அடங்கிய கலை.

# குடியரசு தமிழ் வாசகம்

(ஐந்தாம் புத்தகம்)

(Std V)

ஐந்தாம் வகுப்பு





வீ. கி. சேஷாத்திரி பீ. ஏ., எல்., டி.,
சென்னை கல்வி இலாகா





டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு ஸன்ஸ்,
மதராஸ்


 [விலை 12 அணா

# முகவுரை

குடியரசு தமிழ் வாசகம் என்னும் இந்நூல் வரிசை தமிழ் நாட்டில் துவக்கப் பள்ளிகளில் பயிலும் சிறுவர் சிறுமியருக்கு உரியது. துவக்கப் பள்ளிகளில் ஒன்று முதல் ஐந்து வகுப்புக்களுக்கு அரசியலார் வெளியிட்டுள்ள பாடதிட்டத்தின்படி இந்நூல் வரிசை எழுதப்பட்டுள்ளது. அந்தந்த நிலையில் குழந்தைகள் தெரிந்து கொள்ள வேண்டிய சொல்லாட்சிப் பெருக்கம் கவனத்தில் இருத்திப் பாடங்கள் இயற்றப்பட்டுள்ளன. மௌன வாசிப்புப் பழக்கம் உண்டாவதற்குத் தேவையான கட்டளைகளும் கதைகளும் சேர்க்கப் பட்டுள்ளன. பாடங்களின் இறுதியில் கடின சொற்களின் பொருள் விளக்கமும், பயிற்சிகளும், வினுக்களும், இலக்கணக் குறிப்புக்களும் சேர்க்கப்பட்டுள்ளன. இந்நூல் வரிசையைத் தமிழுலகம் ஆதரிக்கும் என்று நம்புகிறேன்.

சென்னை
1-11-'50

வீ. கி. சேஷாத்திரி

# உள்ளுறை

# 1. இறை வணக்கம்

| | | |
|---|---|---|
| அருவனாகி | சத்தியம் | மால் |
| சலம் | மாதொரு பாகன் | பரமனார் |

உலகெலாம் படைத்துக் காத்து
உருவிலா தழித்த நாளும்
உண்மையாய் எண்ணமாளா
ஒருவனாய் அருவனாகிச்
சலமிலா தெண்ணுவோர்க்குச்
சத்திய மயமே யாகித்
தனித்தனி பிரித்தபோதும்
தானதிற் பிரியானாகி
மலரின்மேல் தேவனாகி
மாதொரு பாகனாகி
மாலொடு புத்தனாகி
மகம்மதாய் ஏசுவாகிப்
பலபல தெய்வமாகிப்
பற்பல மதங்களாகிப்
பக்குவப்படியே தோன்றும்
பரமனார் பெருமை போற்றி !

—நாமக்கல் கவிஞர்

1. அரும் பொருள்: உருவிலாது - உருவமே இல்லாமல். அருவனுகி - உருவம் இல்லாதவனுகி. உருவம். × அருவம். சலம் - பொய். மாளா - முடியாத. மாதொருபாகன் - உமாதேவியை ஒருபாகத்தில் உடையவன்; சிவபெருமான். மால் - திருமால். மலரின்மேல் தேவன் - பிரமன்.

2. கேள்விகள்:

   1. கடவுளுடைய பண்புகள் யாவை?
   2. கடவுளை மக்கள் எவ்வாறு வணங்குகின்றனர்?

3. பயிற்சி:

   1. படைத்து, சத்தியம், மாதொருபாகன், பக்குவம் — இச் சொற்களை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.
   2. உண்மை, சத்தியம், உருவம், தோன்றும், பெருமை—இச் சொற்களுக்கு எதிர்ப்பதங்கள் எழுது.
   3. கடவுளின் பெருமையை நான்கு வாக்கியங்களில் எழுது.

4. இலக்கணம்: நாம் தமிழர். தமிழ் நாட்டில் வாழ்ந்து வருகிறோம். நமது தாய்மொழி தமிழ். தமிழ் மொழியைப் பிழையின்றிப் பேசவும் எழுதவும் வேண்டும்; தோன்றியவாறு பேசுவது தவறு; ஒரு மொழியைப் பேசவும் எழுதவும் இலக்கணம் உதவுகிறது. ஆதலால், தமிழ் இலக்கணத்தை நாம் நன்கு கற்க வேண்டும்.

# 2. தமிழ் நாட்டின் தவப் புதல்வர்

| | | | |
|---|---|---|---|
| சுதந்தரம் | உறுதுணையாக | இன்னல் | மரபு |
| அரும்பாடு | மாண்புற | அரும்பணி | துவக்கப்பள்ளி |
| ஆட்சிவர்க்கம் | அர்ப்பணம் | மாவட்டம் | உயர்நிலைப்பள்ளி |
| உரிமை | பத்திரமாக | அந்தணர் | கல்லூரி |
| உப்பளம் | பயணம் | ஆணை | தொண்டர்படை |
| அவை | மனப்பண்பு | அறிமுகம் | நுண்ணறிவு |
| வழக்கறிஞர் | உயர்நீதிமன்றம் | கிளர்ச்சி | மதுவிலக்கு |

1. பாரத நாடு சுதந்தரம் பெற்று நான்கு ஆண்டுகள் முடிந்துவிட்டன. இச் சுதந்தரத்தைப்பெற நாம் அரும்பாடு பட்டோம். அண்ணல் காந்தியடிகளின் தலைமையில் ஏறக்குறைய முப்பது ஆண்டுகள் போராடினேம். அந்நிய ஆட்சிவர்க்கத்தினர் எளிதில் நமக்கு உரிமை வழங்கவில்லை. நாட்டில் அமைதி குன்றமல், கத்தியின்றி, இரத்தமின்றி நாம் புரிந்த போரின் வன்மையை எடுத்துரைக்க இயலாது.

2. இப்போரில் காந்தியடிகளுக்கு உறுதுணையாக இருந்த பெரியார்கள் பலர். அவர்களில் தென்னுட்டில் மக்களைத் தட்டி எழுப்பி மாண்புறச் செய்தவர் சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் என்ற பெரியார் ஆவார். இவரை 'இராஜாஜி' என்றே பலரும் கூறுவது வழக்கம். இவர் தமது வாழ்நாளைத் தாய்நாட்டுத் தொண்டுக்கே அர்ப்பணம் செய்தவர்; காந்தியடிகளின் நெருங்கிய நண்பர்; அடிகளுடைய அன்புக்குப் பாத்திரமாக இருந்தவர்; தன்னலப் பற்று இல்லாமல் உழைப்பவர்; இன்னல்கள் பல நேரிடினும் தளராத மனவுறுதி படைத்தவர்; உரிமை பெற்ற இந்திய நாட்டின்

'கவர்னர்-ஜெனரல்' பதவியைத் திறமையுடன் வகித்து வந்தவர்; இன்று பாரத நாட்டின் அமைச்சர் சபையில் அரும்பணி செய்து வருகிறவர்.

3. தமிழ் நாட்டின் ஒரு பகுதியாகிய சேலம் மாவட்டத்தில், ஓசூர் என்ற நகரத்திற்கு அருகில், தொறப்பள்ளி என்றொரு சிறு கிராமம் உளது. இவ்வூரில் சக்கரவர்த்தி ஐயங்கார் என்பவர் அறிவிலும் ஒழுக்கத்திலும் சிறந்தவராக வாழ்ந்து வந்தார். அவர் 'நல்லான் சக்கரவர்த்தி' என்ற வைணவ அந்தணர் மரபில் உதித்தவர். அவருக்கும், அவருடைய மனைவியாராகிய சிங்காரம் அம்மையாருக்கும், 1878-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 9-ஆம் நாள், ஒரு குழந்தை பிறந்தது. பெற்றோர் அக் குழந்தைக்கு இராசகோபாலன் எனப் பெயரிட்டனர்.

4. இராசகோபாலன் தகுந்த வயதில் பள்ளிக்கு அனுப்பப்பட்டார். இளமையில் ஓசூரிலிருந்த துவக்கப் பள்ளியில் படித்தார்; அங்கே படிப்பு முடிந்தபின்பு, பெங்களூரில் உயர்நிலைப் பள்ளியிலும், கல்லூரியிலும் படித்துத் தமது பதினெட்டாம் வயதில் பீ. ஏ. பட்டம் பெற்றார். பள்ளிப் பருவத்தில் அவர் கல்வியில் கண்ணுங் கருத்துமாக இருந்தார்; தமது நுண்ணறிவால் ஆசிரியர்களுடைய மனத்தைக் கவர்ந்தார். பின்பு சட்டக் கல்லூரியில் சேர்ந்து பீ. எல். பட்டமும் பெற்றார். அந்நாளில் அவர் அலர்மேலுமங்கை என்ற மாதரசியைத் திருமணம் செய்துகொண்டார்.

5. கல்விப் பயிற்சி முடிந்ததும் இராசகோபாலாச்சாரியார் சேலத்தில் வழக்கறிஞர் தொழில் செய்யத் தொடங்கினார். இத்தொழிலில் மிகவும் விரைவில் புகழ்

பெற்றார். இவருடைய சட்ட அறிவும் நுணுக்கமான வாதத்திறமையும் கண்டோர் வியக்கும் வண்ணம் இருந்தன. இதனால் இவருக்குப் பேரும் புகழும் பொருளும் பெருகின. 1919-ஆம் ஆண்டில் சென்னையில் குடியேறி, அங்கே உயர்நீதிமன்றத்தில் தொழில் நடத்திவரலானார்.

6. அச்சமயம் காந்தியடிகள் சென்னைக்கு வந்தார். அவருக்கு இராசகோபாலாச்சாரியார் அறிமுகம் செய்து வைக்கப்பட்டார். இதுதான் இருவருக்கும் ஏற்பட்ட முதல் சந்திப்பு ஆகும். அன்று முதல் இருவரும் உள்ளங் கலந்த நண்பர்கள் ஆனார்கள். இராசகோபாலாச்சாரியார் நாட்டின் உரிமைப் போரில் அன்று முதல் ஈடுபடலானார். காந்தியடிகளின் திட்டங்களைத் தமிழ்நாட்டில் நடத்தும் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். இதனால் சென்னையில் உரிமைப்போர் இயக்கம் வலுப்பெற்றது.

7. 1930-ஆம் ஆண்டில் காந்தியடிகள் அந்நிய அரசியலாரின் உப்புவரியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தார். கடற்கரையில் இயற்கையாகக் கிடைக்கும் உப்பை எடுப்பதற்கு யாவருக்கும் உரிமையுண்டு என்று வாதித்தார். காந்தியடிகள் 'தண்டி' என்ற உப்பளத்திற்குக் கால்நடையாகப் பயணம் செய்தார். தமிழகத்தில் **வேதாரணியம்** என்ற விடத்தில் உப்பு எடுப்பதற்கு இராசகோபாலாச்சாரியார் தொண்டர் படையுடன் கால்நடையாக யாத்திரை செய்தார்; அங்கு, அரசியலார் ஆணையை மீறி உப்பு எடுத்ததும், கைது செய்யப்பட்டு, ஒன்பது மாதங்கள் வெறுங்காவல் தண்டனை அடைந்தார்.

8. இராசகோபாலாச்சாரியார் 1937-ஆம் ஆண்டில் சென்னை மாகாணத்தின் முதல் அமைச்சராகப்

பதவி ஏற்ருர்; மாகாண ஆட்சிப் பொறுப்பை ஏற்று மிகத் திறமையுடன் நிர்வாகத்தை நடத்திஞர். மக்களின் நலனேயே கருதிப் பல சட்டங்களே இயற்றிஞர். குடிப்பது பாவம்; கட்குடியால் விளேயும் தீமை அளவிடமுடியாது; கட்குடியை நிறுத்த மதுவிலக்குச் சட்டம் செய்தார்; குடியானவர்களுக்குத் தேவையான சட்டங்களே இயற்றிஞர். அவருடைய ஆட்சித் திறமையைக் கண்டு ஆங்கிலேயரும் வியந்தனர்.

9. 1947-ஆம் ஆண்டில் ஆகஸ்டு மாதம் 15-ஆம் தேதியன்று நள்ளிரவில் நமது நாடு சுதந்தரம் பெற்றது; அப்பொழுது இராஜாஜி மேற்கு வங்காளத்தின் கவர்னராகப் பதவி ஏற்ருர். பின்பு கவர்னர்-ஜெனரல் பதவியையும் திறமையுடன் வகித்தார். 1950-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26-ஆம் நாள் நமது நாடு குடியரசு நாடாக மாறிற்று; அன்று அவர் அப்பதவியிலிருந்து விலகிஞர். மீண்டும் பாரத நாட்டின் அமைச்சர் அவையில் அரும்பணி ஆற்றிவருகிருர்.

10. இராஜாஜி நம் தமிழ்நாட்டின் தவப்புதல்வர்; தமிழ் மொழியில் மிகுந்த பற்றுக் கொண்டவர்; ஆங்கிலத்திலும் வல்லவர்; இம்மொழிகளில் அவர் பல நூல்களே இயற்றியிருக்கிருர். அவர் சாதிமத வேற்றுமைகள் இல்லாதவர்; எவரிடமும் இன்சொல் பேசுகிறவர்; பின்வருவதை முன் கூட்டியே உணரும் நுண்ணறிவு வாய்ந்தவர்; நாட்டின் நலமே தமது நலம்எனக் கருதுகின்றவர்; நன்கு பேசும் திறமை பெற்றவர்; இன்பதுன்பங்களேச் சமமாகக் கருதும் உள்ளம் படைத்தவர்; எதிர்ப்புக்களேயும் அவமதிப்புக்களேயும் கண்டு அஞ்சாத நெஞ்சம் படைத்தவர்; விருப்பு வெறுப்

பின்றித் தொண்டுசெய்யும் மனப்பண்பு உள்ளவர். அப் பெரியார் இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து நமது நாட்டிற்கு நல்வழி காட்டுவாராக!

அன்னை யடிமை நிலை போக்கி
அறப்போர் வெற்றித் தளபதியாய்
மன்னுங் காந்தி யடிகளுக்கு
வலக்கை யாக நின்றுதவி
சென்னை மக்கள் புகழ் வளர்த்த
செல்வா! இராச கோபாலா!
இன்னும் பல்லாண் டிவ்வுலகில்
இனிது வாழ்க! வாழியவே!

—கவிமணி

1. அரும்பொருள் : உறுதுணையாக - உற்ற துணைவராக. மாண்புற - சிறப்புமிக. பயணம் - பிரயாணம். இன்னல் - துன்பம். அரும்பணி - அருமையான வேலை. மாவட்டம் - ஜில்லா. மரபு - வமிசம். ஆணை - கட்டளை. நுண்ணறிவு - நுட்பமான அறிவு. வழக்கறிஞர் - வக்கீல்.

2. கேள்விகள் :

1. இராசகோபாலாச்சாரியார் எங்கே பிறந்தார்?
2. அவர் எங்கெங்கே கல்வி பயின்றார்?
3. காந்தியடிகளை இராஜாஜி எப்பொழுது சந்தித்தார்?
4. 1930-இல் இராஜாஜி ஏன் சிறை சென்றார்?
5. முதல் அமைச்சராக இருந்து இராஜாஜி செய்த நன்மைகள் யாவை?
6. நாம் சுதந்தரம் பெற்றது முதல் இராஜாஜி வகித்து வந்த பதவிகள் யாவை?
7. இராஜாஜியின் நற்பண்புகள் யாவை?

3. பயிற்சி:

1. எதிர்ப்பதங்கள் யாவை?—சுதந்தரம், பாத்திரம், அமைதி, வன்மை, தன்னலம், நண்பர், சந்திப்பு, இன்சொல்.

2. அரும்பாடு, உறுதுணை, ஏறக்குறைய, அமைதி, அரும்பணி, மரபு—இச்சொற்களை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

3. தெரிந்துகொள்: கள் + குடி = கட்குடி. அருமை + பணி = அரும்பணி. பிரித்து எழுது —தென்னாடு, உள்ளங்கலந்த, தவப்புதல்வர், இன்சொல், மனப்பண்பு, இன்பதுன்பம், பல்லாண்டு.

4. இலக்கணம்: பல வாக்கியங்கள் சேர்ந்தது ஒரு பாரா அல்லது பத்தி எனப்படும். ஒவ்வொரு பத்தியிலும் ஒரு கருத்து விவரிக்கப்பட்டிருக்கும். இப்பாடத்திலுள்ள பத்திகள் ஒவ்வொன்றுக்கும் தலைப்புக்கள் கொடு.

## 3. முயல் யானையை வென்றது

| | | | |
|---|---|---|---|
| **பெருமான்** | **பொல்லாங்கு** | **தூதன்** | **நாணம்** |
| **நாவறட்சி** | **மீள** | **அனுகூலம்** | **எசமானன்** |
| **பரிவாரங்கள்** | **உபாயம்** | **ஆமோதித்தன** | **சமாதி** |
| **கூக்குரல்** | **நஞ்சு** | **வீராப்பு** | **பிம்பம்** |
| **தணித்து** | **மண்டலம்** | **வலியவன்** | **அடுத்திருந்தால்** |

*1.* ஒரு காட்டில் **சதுரதந்தன்** என்ற அரச யானை ஒன்று, பல யானைகளுடன் கூடி வாழ்ந்து கொண்டிருந்தது. ஒரு சமயம் அக் காட்டில் வெகுகாலம் மழை பெய்யாமல் போய்விட்டது; அதனால் ஆறு, ஏரி, குளம்,

குட்டை முதலான நீர்நிலைகள் யாவும் வற்றிப் போய் விட்டன. யானைகள் குடிக்க நீரின்றித் தாகத்தினால் தவிக்கலாயின.

2. அந் நிலையில் யானைகள் எல்லாம் ஒன்று கூடிச் சதுரதந்தனைக் கண்டு, " அரசர் பெருமானே! நாங்கள் யாவரும் தாகத்தினால் மிக மிக வருந்துகிறோம். எங்களில் சிலர் நாவறட்சியினால் மாண்டார்கள். இங்கே இனியும் இருந்தால் எல்லோரும் இறந்து போவோம். ஆதலின், இவ்வனத்தைவிட்டு நீங்கி, நீர்வளம் மிகுந்த இடத்தை நாடிச் சென்று, அங்கு வாசம் செய்தால் சுகம் அடைவோம்" என்று வேண்டிக் கொண்டன.

3. அரசயானை தன் பரிவாரங்களுடைய கூக் குரலைக் கேட்டுச் சிறிது நேரம் யோசித்தது. பின்பு அவைகளைப் பார்த்து, "இங்கிருந்து ஐந்து நாட்கள் பயணம் செய்தோமானால், பாதாள கங்கையினால் நீர் நிறைந்துள்ள ஒரு பெரிய மடுவைக் காணலாம். அங்கு நமக்குப் போதியஅளவு தண்ணீர் கிடைக்கும்" என்று சொல்லிற்று.

4. அவ்வாறே யானைகள் யாவும் அங்கே சென்றன; வேண்டுமட்டும் தெளிந்த நீரைக்குடித்துத் தாகத்தைத் தணித்துக் கொண்டன; மாலைவரையில் நீரில் விளையாடி விட்டுக் கரையில் வந்து இருந்தன. அக் கரையில் பல முயல்கள் வசித்து வந்தன. அவற்றில் சில யானைகளின் கால்களின் கீழே அகப்பட்டு இறந்தன. சிலவற்றிற்குக் கை கால்கள் ஒடிந்தன; சில முயல்களின் உடல்கள் நொறுங்கின; சிலவற்றின் குடல்கள் சரிந்தன; சிற்சில படுகாயம் அடைந்தன.

5. இப்படிப் பொல்லாங்கு நேர்ந்தவுடனே சில முயல்கள் ஒன்றுய்க்கூடி ஆலோசித்தன. " இன்று

யானைக் கூட்டம் நமக்கு மிகுந்த துன்பத்தை விளைவித்தது; தினமும் இவ்வாறே இருக்கும்; இங்கு வேறு நீர் நிலையும் இல்லை; இதிலிருந்து மீள ஏதேனும் உபாயம் காணவேண்டும்'' என்று பேசிக்கொண்டன. அப்பொழுது சில முயல்கள், "நாம் இவ்விடத்தை விட்டு நீங்குவதே நலம்'' என்றன. வேறுசில, "நமது முன்னோர் வாழ்ந்த இடத்தை விட்டு வேற்றிடம் செல்லக் கூடாது. யானைகளை இவ்விடத்தினின்றும் விரட்டியடிக்கத் தகுந்த தந்திரம் செய்யவேண்டும். நஞ்சில்லாத பாம்பும் படமெடுத்தால் அதைக் கண்டு மனிதர் பயப்படுகிறார்கள் அல்லவா?'' என்று சொல்லின.

6. அது கேட்ட ஒரு முயல், "நான் ஒரு உபாயம் சொல்லுகிறேன். நமது மன்னன் விஜயதந்தன் சந்திர மண்டலத்தில் வாசம் செய்கிறான். அவன் தூதனுப்பினான் என்று ஒரு பொய்த் தூதனை நாம் யானைகளிடம் அனுப்பினால் நமக்கு அனுகூலம் உண்டாகும்'' என்றது. எல்லா முயல்களும் அந்த யோசனையை ஆமோதித்தன. உடனே ஒரு கிழ முயல் நெட்டைக் காதனைப் பார்த்து, "நீ தந்திரம் மிகுந்தவன்; பகைவர்களைச் சமாதானம் செய்கிறவன்; தூதனாகச் செல்ல எவ்விதத்திலும் தகுதியானவன். நீ சென்றால் நமது காரியம் கைகூடும்,'' என்று சொல்லிற்று. நெட்டைக்காதனும் அவ்வாறே தூது செல்லச் சம்மதித்தது.

7. நெட்டைக்காதன், யானைகள் செல்லும் வழியில் ஒரு மேட்டில் உட்கார்ந்து கொண்டது. யானைகள் வரும் பொழுது சதுரதந்தனை நோக்கி நெட்டைக்காதன், "அடா! துஷ்ட யானையே! வெட்கத்தை விட்டு இந்த மடுவில் வந்து நீ பல விளையாட்டுக்களைச் செய்கிறாய். ஆனால் நான் எல்லாரையும் அடித்து எறிந்து விடுவேன்''

என்று வீராப்புடன் பேசிற்று. அது கேட்ட அரசயானை ஆச்சரியமடைந்து, "நீ யார்?" என்று வினவிற்று. முயல், "நான் விஜயதந்த மன்னனுடைய தூதுவன். அவனுடைய ஆணையை உனக்குத் தெரியப்படுத்தினேன். அவன் சந்திரமண்டலத்தில் இருக்கிறான்" என்றது. யானை அது கேட்டு "இவன் வலியவனுடைய தூதன்" என்றெண்ணி, சந்திரனுடைய ஆணை என்ன?" என்று கேட்டது.

8. நெட்டைக்காதன், "நீயும் உன் பரிவாரங்களும் இங்கு வந்து நாணமின்றி நீர் விளையாடிப் பல முயல்களைக் கொன்றுள்ளீர்கள். இந்த ஒரு முறை நான் பொறுத்தேன். உனக்கு உயிர்மேல் ஆசையிருந்தால்



மீண்டும் இங்கே வராதே: இதுவே சந்திரனுடைய கட்டளை. இதை உனக்கு நான் சொன்னேன். உன் மறுமொழி இதற்கு என்ன? சொன்னால் என் அரசனுக்குத் தெரிவிப்பேன்" என்று சொல்லிற்று. அரசயானை, "உன் அரசனிடம் என்னை அழைத்துப்போ. நான்

உன் எசமானனுக்கு வணக்கம் தெரிவித்து விட்டு வேறொரு குளத்திற்குப் போகிறேன்" என்றது.

9. முயல் அது கேட்டுச் சந்தோஷித்து, "நீ என்னோடு கூடத் தனியாக வா; விஜயதந்தனைக் காட்டுகிறேன்" என்றது. யானையும் முயலும் ஒரு ஏரியின் அருகே சென்றன. முயல் யானையை நோக்கி, "சந்திரன் இதோ தண்ணீருக் குள்ளே வந்திருக்கிறான்; அவனை வணங்கி விட்டு விரைவாகப் போய்விடு. அவன் சமாதியில் இருக்கிறான்; சமாதிக்குப் பங்கம் வந்தால் அவன் சினம் கொள்வான்" என்றது. யானை உடனே பயந்து சந்திர பிம்பத்திற்கு வணக்கம் செலுத்தி விட்டுப் போயிற்று.

10. அது முதல் முயல்கள் அங்கே பயமற்றுச் சுகித்திருந்தன. அவ்வாறு பெரியோர்களை அடுத்திருந்தால் மலைபோல் வந்த வினை சூரியன் முன் பனிபோல் நீங்கும்.

1. அரும்பொருள்: பரிவாரங்கள்-கூடவருவோர். தணித்து-அடக்கி. பொல்லாங்கு - தீமை. மீள - தப்பித்துக் கொள்ள. உபாயம்-தந்திரம். நஞ்சு - விஷம். வீராப்பு-இறுமாப்பு. பிம்பம்-கண்ணாடியில் தெரியும் உருவம். அடுத்திருந்தால்-சேர்ந்திருந்தால்.

2. கேள்விகள்:

1. சதுரதந்தனிடம் யானைகள் என்னவென்று சொல்லின?
2. அரசயானை செய்த யோசனை என்ன?
3. யானைகளால் முயல்களுக்கு என்ன தீங்கு நேரிட்டது?

4. முயல்கள் செய்த சூழ்ச்சி என்ன?
5. முயல்கள் எவ்வாறு யானைகளை விரட்டின?

3. பயிற்சி:

1. பொல்லாங்கு, உபாயம், மண்டலம், சமாதி, வீராப்பு, பரிவாரம், கூக்குரல் — இச் சொற்களை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.
2. நஞ்சு, பெரியோர், சுகம், நெட்டை — இவைகளுக்கு எதிர்ச் சொற்களை எழுது.
3. யானை சந்திரபிம்பத்தைக் கண்டபின், தன் பரிவாரங்களுக்கு அச்செய்தியைச் சொல்லுவது போல் எழுது.

4. இலக்கணம்: முயல் யானையைப் பார்த்தது. இதில் முயல் எழுவாய்; பார்த்தது பயனிலை; யானை செயப்படுபொருள். பயனிலையுடன் எதை அல்லது யாரை என்று சேர்த்துக் கேட்கப்படும் கேள்விக்கு வரும் விடையே செயப்படுபொருள் ஆகும்.

பின் வரும் வாக்கியங்களில் எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகியவற்றை எடுத்து எழுது:

1. யானைகள் சதுரதந்தனைக் கண்டன.
2. யானைகள் முயல்களை மிதித்துக் கொன்றன.
3. இவ்விடத்திலிருந்து யானைகளை விரட்டவேண்டும்.
4. முயல்கள் அந்த யோசனையை ஆமோதித்தன.

# 4. சித்திரக் குள்ளன்



| | | | |
|---|---|---|---|
| வறுமை | கானகம் | சகோதரர் | அரக்கன் |
| ஊதியம் | உகுத்தான் | பரிதாபம் | வாடை |
| கடையவன் | கதிரவன் | நடுநிசி | தற்பெருமை |
| வயிரூர | வாக்களித்தான் | உண்டி | மறைவிடம் |
| சந்தடி | மிதியடி | | |

1. முன்னொரு காலத்தில் சிற்றூர் என்னொரு கிராமத்தில் ஒரு குடியானவன் தன் மனைவிமக்களுடன் வாழ்ந்து வந்தான். அவன் வறுமை மிகுந்த நிலையில் இருந்தான். அவன் அருகிலிருந்த காட்டிற்குச் சென்று விறகு வெட்டிக் கொண்டு வந்து, அதிலிருந்து கிடைத்த ஊதியத்தைப் பெற்று, தன் மனைவிமக்களைக் காப்பாற்றி வந்தான். அவனுக்கு ஏழு குழந்தைகள்; கடையவன் மிகவும் குள்ளமாக இருந்தமையால், அவனை யாவரும் சித்திரக்குள்ளன் என்று அழைத்துவந்தனர்.

2. குடியானவன் வரவர மிகுந்த ஏழைமை நிலையை அடைந்தான்; மக்கள் கடும் பசியால் வாடி வருந்தினர் ; அதனைக்கண்ட பெற்றோர் மனம் வருந்தினர். ஒரு நாள் இரவு மக்கள் யாவரும் உறங்கிய பின், குடியானவன் தன் மனைவியை நோக்கி, "நமது மக்கள் வயிறார உண்ண வகையில்லையே! இன்னும் சின்னாட்களில் பசியின் கடுமை தாங்காது அவர்கள் இறந்து விடுவார்கள். இந்தக் கோரத்தை நாம் எவ்வாறு சகிக்க முடியும் ? நாளைக்கு நான் விறகு வெட்டிவரக் கானகம் செல்லுகிறேன்; மக்களையும் என்னுடன் அழைத்துச் செல்லுகிறேன். அவர்களைக் காட்டிலேயே விட்டுத் திரும்பி வந்து விடுகிறேன். கடவுள் அருள் இருந்தால் அவர்கள் பிழைத்துக் கொள்ளட்டும்; இன்றேல் மரணமடையட்டும்; நமது கண்முன் சாகாமல் இருப்பது போதும்" என்று வருத்தத்துடன் சொன்னான்.

3. இந்த மொழிகளைக் கேட்ட அவன் மனைவி அதற்கு இணங்கவில்லை. "ஐயோ! இவ்வாறு செய்யலாமா? என் மக்களை விட்டு நான் எவ்வாறு பிரிந்திருப்பேன் ? அவர்களைத் தனியே அனுப்பி விட்டு நான் எவ்விதம் வாழ்வேன் ? ஏதோ கூழோ கஞ்சியோ நம்மிடம் உள்ளதைக் குடித்து விட்டு நம்முடனேயே அவர்கள் இருக்கட்டும்," என்று புலம்பினாள். ஆனால் குடியானவன் ஏதேதோ சொல்லி அவளைத் தன் யோசனைக்கு இணங்க வைத்தான்.

4. தன் பெற்றோர் பேசிக்கொண்டிருந்தவற்றைச் சித்திரக்குள்ளன் உறங்காமல் கேட்டுக் கொண்டிருந்தான். மறு நாள் விடியற்காலையில் ஒருவரும் அறியாமல் எழுந்து வெளியே சென்றான்; மடி நிறையச் சிறு கூழாங்கற்களைக் கட்டிக் கொண்டு திரும்பினான். தாயார்

மக்களுக்கும் குடியானவனுக்கும் கஞ்சி கொடுத்தாள். குடியானவன் குழந்தைகளுடன் கானகத்தை நோக்கி நடந்தான். மக்களை விட்டுப் பிரிய மனமில்லாமல் தாயார் கண்ணீர் உகுத்தாள்.

5. குடியானவன் தன் மக்களோடு காட்டை நோக்கி நடந்தான். சித்திரக்குள்ளன் வழி நெடுகத் தன் மடியிலிருந்த கூழாங் கற்களைப் போட்டுக் கொண்டே சென்றான். காட்டை யடைந்ததும் குழந்தைகளைச் சுள்ளி பொறுக்கிக்கொண்டு வரும்படி குடியானவன் கட்டளையிட்டான்; தானும் விறகு வெட்டும் வேலையில் ஈடுபட்டான். மாலைப்பொழுது வந்தது; கதிரவன் மேற்கில் மறைந்தான். குடியானவன் சுற்றுமுற்றும் பார்த்தான்; மக்களைக் காணவில்லை; உடனே வீட்டை நோக்கி விரைந்தான்.

6. பிதாவைக் காணாது மக்கள் புலம்பினார்கள். ஆனால் சித்திரக்குள்ளன் அவர்களைத் தேற்றினான். அவர்களை மீண்டும் வீட்டிற்கு அழைத்துச் செல்வதாக வாக்களித்தான். அவ்வாறே தன் சகோதரர்களுடன் சித்திரக்குள்ளன் கூழாங்கற்களைப் பார்த்துக்கொண்டே வீடு வந்து சேர்ந்தான். வீட்டில் தாயார், "என் அருமை மக்களே! உங்களை விட்டு நான் எவ்வாறு உயிர் வாழ்வேன்?" என்று பிரலாபித்துக் கொண்டிருந்தாள். தகப்பனும் வருந்திக் கொண்டிருந்தான். அச்சமயம் "அம்மா! இதோ வந்து விட்டோம். கதவைத்திற" என்று சித்திரக்குள்ளன் கதவைத் தட்டினான். குழந்தைகளைக் கண்ட பெற்றோர் குருடன் கண்பார்வை பெற்றது போல் மனமகிழ்ந்தனர். அவர்களைத் தழுவிக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் பெருக்கினர்.

7. சில நாட்கள் சென்றன. மீண்டும் வீட்டில் வறுமை மிகுந்தது. முன்போலவே குழந்தைகளைக் காட்டில் விட்டுவிட்டு வந்து விடவேண்டும் எனக் குடியானவன் திட்டம் இட்டான். இதையும் சித்திரக் குள்ளன் தெரிந்து கொண்டான்; உடனே கூழாங் கற்கள் பொறுக்கி வர விரும்பினன்; ஆனல் வெளிக் கதவு தாளிடப் பட்டிருந்தது. தாயார் அவர்களுக்கு ஆளுக்கு ஒரு வடை கொடுத்திருந்தாள். சித்திரக் குள்ளன் தன் பங்கு வடையைத் தின்னமல் பத்திரமாய் வைத்துக் கொண்டான்.

8. மறு நாள் தந்தை மக்களுடன் காட்டை நோக்கி நடந்தான். சித்திரக்குள்ளன் வழி நெடுக வடையைப் பிட்டுப் பிட்டுப் போட்டுக் கொண்டே சென்றான். காட்டில் குடியானவன் பிள்ளைகளைச் சுள்ளி பொறுக்கிக்கொண்டு வரும்படி கட்டளையிட்டான்; மாலையில் அவர்கள் அறியாமல் வீடு திரும்பினன். குழந்தைகள் தகப்பனைக் காணமல் அழுதனர். சித்திரக் குள்ளன் அவர்களைத் தேற்றி, வீட்டை நோக்கி அவர் களுடன் புறப்பட்டான். ஆனல் பரிதாபம்! அவனுக்கு வழி தெரியவில்லை. ஏன்? அவன் போட்ட வடைத் துண்டுகளைக் காக்கைகள் தின்று விட்டன! குழந் தைகள் காடெல்லாம் அலைந்து திரிந்தார்கள்.

9. நல்ல நடு நிசி; குழந்தைகளின் கால்கள் தள் ளாடின. சித்திரக்குள்ளன் அருகிலிருந்த ஒரு மரத்தின் மேல் ஏறிப் பார்த்தான்; சற்றுத் தூரத்தில் விளக்கு வெளிச்சம் தெரிந்தது; கீழே இறங்கி அண்ணன் மார்களுடன் அவ் வொளியை நோக்கி நடந்தான். அது ஒரு மாளிகை; அதன் வெளிக்கதவைச் சித்திரக்குள்ளன் தட்டினன். கதவை ஒரு மாது திறந்தாள்; குழந்தை

களைக்கண்டு மனமிரங்கினாள்; அவர்களை உள்ளே அழைத்துச் சென்றாள்; நல்ல உண்டி அளித்தாள்.

*10.* அம்மாது குழந்தைகளைப் பார்த்து, "குழந்தைகளே! இது ஒரு அரக்கனுடைய மாளிகை. அவன் உங்களைக் கண்டால் கடித்துத் தின்று விடுவான். ஆதலால் நீங்கள் ஒளிந்து கொள்ளுங்கள்; காலை விடியுமுன் ஓடி விடுங்கள்" எனக் கூறினாள். சித்திரக்குள்ளன் தன் அண்ணன்மார்களுடன் ஒரு மூலையில் ஒளிந்து கொண்டான். சிறிது நேரம் கழித்து அரக்கன் அங்கு வந்தான். "மனிதவாடை அடிக்கிறதே" என்று வீடு முழுவதும் தேடினான். ஆனால் அவனால் குழந்தைகளைக் கண்டு பிடிக்க முடியவில்லை.

*11.* அரக்கன் உணவு உட்கொண்ட பின், தன் மனைவியாகிய அம்மாதினிடம் தனது பெருமைகளைப்



புகழ்ந்து கொண்டான். அவன் தன் காலில் இருந்த மிதியடிகளைத் தன் மனைவிக்குக்காட்டி, "இவற்றின்

பெருமையை நீ அறிவாயா? இவற்றை நான் இந்திரனிடமிருந்து அபகரித்தேன். இவை எல்லாருடைய காலுக்கும் பொருத்தமாக இருக்கும். இவற்றை அணிந்து கொண்டால் நெடுந்தூரத்தையும் ஒரு நொடியில் கடக்கலாம்," என்று தற்பெருமை அடித்துக் கொண்டான்; பின்பு உறங்கப் போனான்.

12. சித்திரக்குள்ளன் மறைவிடத்திலிருந்து மெல்ல வெளிப்பட்டு, அரக்கனை அணுகி, அச் செருப்புக்களை மெதுவாகக் கழற்றிக் கொண்டான். பின்பு, சந்தடி செய்யாமல் தன் சகோதரர்களுடன் வெளிவந்து, காட்டின் வழியே சென்றான். சில நாட்களில் அவர்கள் தஞ்சாவூரை அடைந்தனர். அச்சமயம் தஞ்சாவூரை ஆண்டுவந்த சோழமன்னன் பாண்டியனுடன் போர் செய்து கொண்டிருந்தான். சித்திரக்குள்ளன் அரசனைக் கண்டு தன் மிதியடியின் மகிமைகளைச் சொல்லி அவனிடம் வேலைக்கு அமர்ந்தான். தன் செருப்பின் மகிமையால் பகைவர்கள் இருக்கும் இடங்களைத் தெரிந்து கொண்டு மன்னனுக்கு அறிவித்து வந்தான். அதனால் சோழ மன்னனுக்கு வெற்றி எளிதில் கிடைத்தது.

13. மன்னன் சித்திரக்குள்ளனைப் பெரிதும் பாராட்டினான்; அவனுக்கு நிரம்பச் செல்வம் அளித்தான்; அவனுடைய சகோதரர்களை ஆதரித்தான்; சித்திரக்குள்ளன் சிற்றூர் சென்று தன்பெற்றோர்களைத் தஞ்சாவூருக்கு அழைத்து வந்தான். மக்களைக்கண்ட பெற்றோர் மனமகிழ்ந்தனர். யாவரும் ஒன்று கூடி இனிது வாழ்ந்து வந்தனர்.

1. அரும்பொருள்: வறுமை - தரித்திரம். ஊதியம் - இலாபம். கடையவன் - கடைசிமகன். கானகம்-காடு. உகுத்தாள்-விட்டாள். கதிரவன்-சூரியன். உண்டி-ஆகாரம். வாடை-மணம். மிதியடி-செருப்பு.

2. கேள்விகள்:

1. குடியானவன் தன் குழந்தைகளை ஏன் காட்டில் விட எண்ணினான்?
2. அவன் மக்கள் எவ்வாறு வீடு திரும்பினர்?
3. மறுமுறை ஏன் அவர்களுக்கு வழிதப்பிப் போயிற்று?
4. சித்திரக்குள்ளன் அற்புதமான மிதியடிகளை எவ்வாறு பெற்றான்?
5. சித்திரக்குள்ளன் சோழனுக்கு எவ்வாறு சகாயம் செய்தான்?

3. பயிற்சி:

1. வயிறார உண்ண, சுற்றுமுற்றும், ஆனந்தக் கண்ணீர், ஊதியம், தற்பெருமை—இச் சொற்களை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.
2. கிராமம், காடு, ஏழைமை, மரணம், உள்ளது, மறைந்தான், வெற்றி—இச்சொற்களுக்கு எதிர்ச் சொற்களை எழுது.
3. சித்திரக்குள்ளன் தஞ்சாவூரிலிருந்து தன் தந்தைக்குக் கடிதம் எழுதுவதுபோல் ஒருகடிதம்எழுது.

4. இலக்கணம்: ஒரு வாக்கியத்தின் எழுவாயைச் செயப்படு பொருளாகவும், செயப்படு பொருளை எழுவாயாகவும் மாற்றி அமைக்கலாம்.

(உ-ம்) சித்திரக்குள்ளன் செருப்பைக் கழற்றினன். செயப்படுபொருள்-செருப்பு. செருப்பு என்ற சொல்லை எழுவாயாக மாற்ற, "செருப்பு சித்திரக்குள்ளனல் கழற்றப் பட்டது" என்று வாக்கியம் மாறும்; ஆனல் கருத்தில் மாறுதல் இல்லை.

பின்வரும் வாக்கியங்களிலுள்ள செயப்படுபொருள்களை எழுவாய்களாக மாற்றி அமைக்க:

1. குடியானவன் மக்களைக் காட்டில் விட்டுவிட்டான்.
2. சித்திரக் குள்ளன் வழியைக் கண்டுபிடித்தான்.
3. குழந்தைகள் சுள்ளிகளைப் பொறுக்கினர்கள்.
4. அரக்கன் மனைவி அன்னம் இட்டாள்.
5. சோழன் சித்திரக் குள்ளனைக் கவுரவித்தான்.

## 5. மயில்



| | | | |
|---|---|---|---|
| கானம் | சிந்தாமணி | தாண்டவம் | மோனம் |
| மின்னல் | செங்கதிர் | வான்மழை | முழவு |

1. வானத்தைப் பாரடியோ—மயிலே!
மாமழை மேகமெல்லாம்
கான முரசடிக்க—மின்னல்
கண்வீசி யாடுதடீ!
மோன வியப்புடனே—புவியுளம்
முற்றுங் குளிருதடீ!
ஆனந்தத் தோகைவிரி—மயிலே!
ஆடிக் களித்திடுவோம்!

2. சிந்தாமணி யடியோ—உனக்குச்
செங்கதிர் வட்டமெல்லாம்!
சந்தமுட னருவி—உனக்கே
தாள மிசைக்குதடீ!
இந்த வுலகைவளர்—வான்மழை
யிடி முழ வடிக்குதடீ!
தந்திமித் தோ மெனவே—மயிலே!
தாண்டவஞ் செய்திடுவோம்!

—யோகி சுத்தானந்த பாரதியார்

1. அரும்பொருள் : கானம் - இசை. மோனம் - சப்த மின்றி. தாண்டவம் - நடனம்.

2. கேள்விகள் :

1. மயில் எப்பொழுது தோகை விரித்து ஆடும் ?
2. கானமுரசு என்றால் என்ன ?
3. அருவியின் சலசலப்பு எதற்கு ஒப்பிடப்படுகிறது ?

3. பயிற்சி :

1. செங்கதிர், இடிமுழக்கம், தாண்டவம், உளங் குளிர — இச்சொற்களை உன் சொந்த வாக்கியங் களில் அமைத்து எழுது.

2. எதிர்ச் சொற்களை எழுது—வானம், மழை ஆனந்தம், சந்தம்.

4. இலக்கணம் : இது ஒரு பாட்டு. இதைப் பாடல் என் றும் செய்யுள் என்றும் சொல்லுவர். செய்யுளுக்கு எதிர்ச் சொல் உரைநடை. நாம் சாதாரணமாக உரை நடையில் பேசுகிறோம்; எழுதுகிறோம். சொற்களால் ஆக்கப் படுவது அல்லது செய்யப்படுவது செய்யுள். பாடலை இசையுடன் பாடவேண்டும். இப்பாடலைப்பாடு; சொற்களின் ஓசை நயத்தைக் கவனி; ஒரே ஒலியுள்ள சொற்களை எடுத்து எழுது.

## 6. விவேகானந்த அடிகள்

| | | | |
|---|---|---|---|
| பெண்மணி | நாட்டம் | மகான் | உருக்கமாக |
| பிரபலம் | விசாரம் | உடற்கட்டு | நாற்றிசை |
| நினைவுச்சின்னம் | ஐயப்பாடுகள் | திவ்விய | துறவறம் |
| உறவினர் | முற்றுத்துறந்த | யாழ் | சொற்பொழிவு |

*1.* வங்கநாட்டின் தலைநகரான கல்கத்தாவில் விசுவநாத தத்தர் என்றொரு அந்தணர் இருந்தார். அவர் அந்நகரில் பிரபல வழக்கறிஞராகத் தொழில் நடத்தி வந்தார். அவருடைய மனைவியார் புவனேசுவரி அம்மை யார். அவ்விருவரும் மிகுந்த தெய்வபக்தி உடைய

வர்கள்; அவர்கள் காசி விசுவநாதரை நாள் தோறும் பூசித்து வந்தனர்.

2. *1863*–ஆம் ஆண்டில் ஜனவரித் திங்களில் அவர்களுக்கு ஓர் அழகான ஆண் மகவு பிறந்தது. பெற்றோர் அக்குழவிக்கு விசுவநாதருடைய நினைவுச்சின்ன



மாக வீரேசுவரன் எனப் பெயரிட்டனர். ஆனால் வீட்டிலுள்ளோர் யாவரும் அக்குழவியை நரேந்திரன் என்ற செல்வப் பெயரால் அழைத்து வந்தனர்.

3. இளமையிலே நரேந்திரர் கருத்துடன் கல்வி பயின்றார்; தமது பதினெட்டாம் வயதில் பீ. ஏ. பட்டமும் பெற்றார். தந்தையாரைப் போலவே நரேந்திரரும் சட்டக் கல்லூரியில் படித்து, வழக்கறிஞர் தொழில் செய்யவேண்டு மென்று அவருடைய உறவினர் விரும்பினர். ஆனால் நரேந்திரருடைய மனம் அத்தொழிலில் நாட்டம் கொள்ளவில்லை; வேத நூல்களையும் புராணங்களையும் ஆராய்வதிலே அவர் காலத்தைக் கழித்தார்: பாரத நாட்டின் சரித்திரத்தைப் படித்து அதன் பண்டைப் பெருமைகளை நன்கு உணர்ந்தார்.

4. எப்பொழுதும் வேதாந்த விசாரமாக விருந்த நரேந்திரர், கடவுளை அறிய உள்ளங்கொண்டார். அவருடைய ஐயங்களைத் தெளிவிக்கத் தகுந்த அறிஞர் ஒருவரும் அவருக்குக் கிடைக்கவில்லை. பல சாதுக்களைச் சந்தித்தும் அவருடைய ஐயப்பாடுகள் தெளிவடையவில்லை. அக்காலத்தில் கல்கத்தாவுக்கு அருகே, காளி கட்டம் என்ற சக்தி ஆலயத்தில், இராமகிருஷ்ண பரமஹம்ஸர் என்ற மகான் ஒருவர் இருந்தார். அவர் முற்றத்துறந்த முனிவர் பெருமான்; காளிதேவியின் பரம பக்தர். வங்க நாட்டு மக்கள் அவரைப் போற்றி வந்தனர். ஒரு நாள் நரேந்திரரும் அவரைக் காணச்சென்றார்.

5. நரேந்திரர் நேர்த்தியான உடற்கட்டும் சுந்தரமான முகமும் உடைய திவ்விய புருஷர்; அவருடைய குரல் யாழின் இனிமையை நிகர்த்தது; இசைபாடுவதில் வல்லவர். அவரைக் கண்ட பரமஹம்ஸர் மிக்க மகிழ்ச்சியடைந்தார்; நரேந்திரருடன் சிறிதுநேரம் உரையாடி

ஞர்; பின்பு அவரை ஒரு பாட்டுப் பாடும்படி வேண்டி ஞர். நரேந்திரரின் இனிய கானம் அவரை மயக்கி



விட்டது. அவர் கண்களில் நீர்ததும்ப, "குழந்தாய், நரேந்திரா! நீ இந்நாள் வரை எங்கிருந்தாய்? உனக்காகப் பல ஆண்டுகளாக நான் காத்திருக்கிறேனே!" என்று உருக்கத்துடன் கூறினர். பெரியோர் பெருமை பெரியோர் தாமே அறிவார்!

6. அந்நாள் முதல் நரேந்திரருக்கு இராமகிருஷ்ண பரமஹம்ஸரிடத்தில் தம்மை அறியாமலேயே பற்று மிகுந்தது. அடிக்கடி அப்பெரியாரிடம் சென்று தம் ஐயங்களைத் தீர்த்துக் கொள்வார். நாளடைவில் நரேந்திரர் மனத்தெளிவடைந்து பரமஹம்ஸரின் சீடர் ஆனார். பரமஹம்ஸர், "இச்சீடன் வாயிலாக உலகில் அறிவுச்சுடர் வீசும்" என்று மனவமைதி அடைந்தார். சின்னாட்களுக்குப்பின் பரமஹம்ஸர் சித்தி யடைந்தார். அவருடைய நினைவுச் சின்னமாக, நரேந்திரருடைய நன்முயற்சியால், அவர் சித்தி பெற்ற தலத்தில், ஒரு மடம் அமைக்கப்பட்டது. இந்து மதத்தின் உண்மைகளை நாற்றிசைகளிலும் பரப்பவேண்டும் என்பதே இம்மடத்தின் நோக்கம். இப்பொழுது இதன் கிளைகள் பல நாடுகளிலும் உள.

7. துறவறம் பூண்ட நரேந்திரர் **விவேகானந்தர்** எனப் பெயர் ஏற்றார். இமாலயக் குகைகளில் சில காலம் தவம் செய்தார்; திபேத்து நாட்டுக்குச் சென்று புத்தமத ஆராய்ச்சி செய்தார்; திரும்பி வந்து, பாரத நாடு முழுதும் கால்நடையாகவே யாத்திரை செய்தார். வழி நெடுகப் பல நகரங்களிலும் சிற்றூர்களிலும் இந்து மதக் கொள்கைகளைக் குறித்துச் சொற்பொழிவுகள் பல செய்தார்.

8. முடிவில் விவேகானந்தர் சென்னை நகரம் சேர்ந்தார். சென்னை மக்கள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டார்; அவருடைய நற்குணங்களும் நுண்ணறிவும் மக்களை வசீகரித்தன. சென்னை மக்கள் செய்த பொருளுதவியால் அவர் அமெரிக்கா சென்றார். அமெரிக்காவில் சிகாகோ நகரில் அப்பொழுது ஒரு சர்வமத

மாகாநாடு நடந்தது. அதில் விவேகானந்தர் இந்து மதத்தைப் பற்றி ஒரு சொற்பொழி வாற்றினர். அமெரிக்க மக்கள் அவருடைய நேர்த்தியான தோற்றத்தையும், சொற்பொழிவுத் திறமையையும், ஆழ்ந்த அறிவையும் கண்டு அவரைக் கொண்டாடினர்கள். அமெரிக்காவில் பல நகரங்களில் பிரசங்கம் செய்தார். பின்பு இங்கிலாந்து வழியாகத் தம் தாய் நாட்டிற்குத் திரும்பி வந்தார்.

9. அப்பொழுது நமது நாட்டில் ஒரு கொடிய பஞ்சம் உண்டாயிற்று. பல ஏழைகள் அப்பஞ்சத்தில் மாண்டனர். அடிகள் பணம் திரட்டிப் பலமக்களைக் காப்பாற்றினர். பின்பு 1902-ஆம் ஆண்டில் ஜுலை மாதத்தில் சித்தியடைந்தார். அவர் நாற்பது ஆண்டுகளே வாழ்ந்திருந்தார்; அக்குறுகிய காலத்திற்குள் இந்து மதத்திற்கும் இந்தியாவுக்கும் அவர் அழியாப் புகழைத் தேடிக் கொடுத்தார்; அம் மகானை நாம் என்றும் போற்றி வருவோமாக!

1. அரும்பொருள் :

நாட்டம்-இஷ்டம். ஐயப்பாடு-சந்தேகம், யாழ்-வீணை.

2. கேள்விகள் :

1. நரேந்திரருடைய பெற்றோரின் பெயர்கள் யாவை?
2. நரேந்திரர் ஏன் சாதுக்களைச் சந்தித்தார்?
3. பரமஹம்ஸர் நரேந்திரருடைய பாடலைக் கேட்டு என்ன சொன்னர்?
4. பரமஹம்ஸர் எதனல் மனவமைதி பெற்றார் ?
5. துறவறம் பூண்ட பின்பு விவேகானந்தர் செய்த வேலை என்ன ?

6. விவேகானந்தர் அமெரிக்காவுக்கு எதற்காகச் சென்றார் ?
7. நமது நாட்டிற்கு விவேகானந்தர் செய்த சேவை என்ன ?

3. பயிற்சி :

1. எதிர்ச் சொற்களை எழுதுக : ஆண், இளமை, பண்டை, சீடன், துறவறம்.
2. நினைவுச்சின்னம், நாட்டம், முற்றத்துறந்த, நாளடைவில், பொருளுதவி, சொற்பொழிவு— இச்சொற்களையும் சொற்றொடர்களையும் உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.
3. இப்பாடத்தில் முதல் பத்தியில் உள்ள பெயர்ச் சொற்களையும் வினைச்சொற்களையும் எடுத்து எழுது.
4. இப்பாடத்தில் நான்காம் பத்தியிலுள்ள பெயரெச்ச வினையெச்சங்களையும், வினைமுற்றுக்களையும் எடுத்து எழுது.

4. இலக்கணம் : கீழ்வருவனவற்றைப் படி :
பரமஹம்சர் பேசினார் — பரமஹம்சர் பேசவில்லை.
நரேந்திரர் சட்டக்கல்லூரியில் படித்தார் — நரேந்திரர் சட்டக்கல்லூரியில் படிக்கவில்லை.
சீடர்கள் மடம் அமைத்தனர் — சீடர்கள் மடம் அமைக்கவில்லை.

இவற்றுள் முதலில் காணப்படும் வாக்கியங்களிலுள்ள வினைமுற்றுக்கள் தொழில் நிகழ்ச்சியைக் காட்டுகின்றன. மற்றவை தொழில் நிகழாமையைக் காட்டுகின்றன. முதலில் உள்ளவை உடன்

பாடு என்றும், பிந்தியவை எதிர்மறை என்றும் சொல்லப்படும்.

கீழ்வரும் வாக்கியங்களை எதிர்மறை வாக்கியங்களாக மாற்றி எழுது.

1. அவர் தெய்வபக்தி உடையவர்.
2. இளமையில் நரேந்திரர் கருத்துடன் படித்தார்.
3. நரேந்திரருடைய இனிய கானம் அவரைமயக்கி விட்டது.
4. விவேகானந்தர் இமாலயத்தில் தவம் செய்தார்.
5. நாட்டில் கொடிய பஞ்சம் தோன்றிற்று.

# 7. ஜெரொசப்பா நீர்வீழ்ச்சி

| | | | |
|---|---|---|---|
| எழில் | இருமருங்கு | வர்ணஜாலங்கள் | நகைச்சுவை |
| கம்பீரம் | கமழும் | வானவில் | ஆங்காங்கே |
| பயங்கரம் | ரீங்காரம் | நிகழ்ச்சி | சித்திரிக்க |
| பரவசம் | பேரிரைச்சல் | வற்புறுத்தினர் | கொஞ்சிக்குலாவுதல் |
| மந்திகள் | | | |

1. இயற்கையின் எழிலுக்கு நிகர் ஒன்றுமே கிடையாது. இயற்கை காட்சிகளின் கம்பீரத் தோற்றமும் பயங்கரம் மிகுந்த அழகும் காண்போர் மனத்தைக் கவரும் இயல்புடையன. இத்தகைய இயற்கைக் காட்சிகள் பல நம் நாட்டில் உள. காஷ்மீரம், மைசூர் முதலான மலைநாடுகளில் இயற்கையின் எழிலைக் கண்டு சுவைக்கலாம்; அதைப் பருகிப் பரவசம் அடையலாம். இயற்கையன்னையின் மடிமேல் தவழ்ந்து கொஞ்சிக் குலாவலாம்; உயர்ந்த மலைகளும், அடர்ந்த காடு

களும், தவழ்ந்து வரும் நதிகளும், உயரமான நீர்வீழ்ச்சி களும், பனிமலைக் காட்சிகளும் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் இயல்புடையன.



2. அத்தகைய தோற்றங்களில் ஜெரொசப்பா நீர் வீழ்ச்சியும் ஒன்றாகும். உலகிலேயே இது மிகப்பெரியதும் அழகு வாய்ந்ததுமான நீர்வீழ்ச்சி ஆகும். இது மைசூர் இராச்சியத்திற்கும் பம்பாய் இராச்சியத்திற்கும் இடையில் உள்ளது. மைசூர் இராச்சியத்திலுள்ள ஷிமோகா ஜில்லாவில் சாகர் என்ற இருப்புப்பாதை நிலையத்திற்கு ஏறக்குறைய முப்பது மைல் தொலைவில்

இந்த நீர்வீழ்ச்சி இருக்கிறது. நிலையத்திலிருந்து நீர் வீழ்ச்சிக்குச் சென்று வர மோட்டார் பஸ்கள் உள்ளன. நீர்வீழ்ச்சிக்குச் செல்லும் வழியில் **சாராவதி** என்ற நதியைக் கடக்கவேண்டும். ஆனால் அந்நதியைக் கடக்கப் பிரயாணிகள் மோட்டார் பஸ்களை விட்டு இறங்கவேண்டியதில்லை. ஒன்றோடொன்று இணைக்கப்பட்ட படகுகளில் பஸ் அக்கரைக்குக் கொண்டு செல்லப்படும். இந்நதியின் அகலம் சுமார் 250 கெஜம்; ஆனால் ஆழம் குறைவு. மாலையில் மலைச் சரிவில் இறங்கும் கதிரவனுடைய செம்பொற் கிரணங்கள் நதியின் அசைவற்ற நீர்ப்பரப்பிலும், நடுநடுவே காணப்படும் கற்பாறைகளின் மேலும் படிந்து பொன்மயமான ஒளியை வீசுவதைக்காணலாம். அருவியிலிருந்து வீசும் மலைக்காற்று மனமகிழ்ச்சியை அளிக்கவல்லது.

3. நதியைக் கடந்து நீர்வீழ்ச்சிக்குச் செல்லும் பாதை வளைந்து வளைந்து செல்கிறது. சுற்றிலும் கண்ணுக்கினிய தோற்றங்கள் காணப்படுகின்றன. பாதையின் இருமருங்கிலும் காணப்படும் இயற்கை மணம் கமழும் மலைச்சாரல்கள், நீண்டு உயர்ந்த பெருங் குன்றுகள், வானளாவிய மரங்கள், இயற்கை இன்பம் பொழியும் பசுஞ்சோலைகள், சோலைகளில் ரீங்காரம் செய்யும் வண்டினங்கள், மந்திகள் தம் குட்டிகளை அணைத்துக்கொண்டு மரக்கிளைகளில் தாவிச்செல்லுதல், இவைபோன்ற காட்சிகளைச் சொற்களில் சித்தரிக்க இயலாது.

4. நாகரிக வாழ்க்கையின் ஆடம்பரங்களில் ஊன்றிக்கிடக்கும் மக்களுக்கு, இயற்கையழகு வாய்ந்த

இம்மலைச்சாரலில் வாழ்க்கை அதிக இன்பம் அளிக்கும் என்பதில் ஐயமில்லை. மலைச் சமவெளிகளில் பயிர் செய்து வாழும் மக்கள் இயற்கையுடன் உறவாடிப் பேரின்ப சுகம் அடைகின்றனர். நீர்வீழ்ச்சி அருகில் வரவரக் கடலோசை போன்ற ஒரு பேரிரைச்சல் நமது செவிகளில் விழுகின்றது. இச்சப்தம் நீர்வீழ்ச்சியி னின்றே வருகிறது. பஸ்ஸிலிருந்து இறங்கிச் சற்று தூரம் சென்றால் நமது கண்முன்னே இம்மாபெரும் நீர் வீழ்ச்சியைக் காணலாம்.

5. நீர்வீழ்ச்சிக்கு அருகில், ஆங்காங்கே மேடைகள் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றின் மேலே நின்று பார்த்தால், மலையின் உச்சியில் ஏறக்குறைய தொளா யிரம் அடி உயரத்திலிருந்து 'ஓ' என்றபேரிரைச்சலோடு விழும் நீர்வீழ்ச்சியைக் காணலாம். நீர்வீழ்ச்சி நான்கு அருவிகளாகப் பிரிந்து விழுகிறது; இவற்றிற்கு இராஜா, இராணி, ரோரர், ராக்கெட் எனப்பெயர்கள் வைத்துள்ளனர். பாறைகளுக்கிடையே விழும் நீரை நோக்கினால் அது பொங்கும் கடல்போல் தோற்றமளிக்கும். நீர்வீழ்ச்சி விழும் வேகத்தில் கிளம்பும் நீர்த்துளிகளின் மேலும், வெண்மை நிறமான நுரையின் மேலும் மாலைச் சூரிய னுடைய செங்கதிர்கள் விழுவதால் ஏற்படும் வர்ண ஜாலங்கள் நிறைந்த வானவில்லின் தோற்றம் வேறெங் கும் காணமுடியாத அற்புதம் ஆகும்.

6. இந் நீர்வீழ்ச்சியைப் பற்றிச் சுவை மிகுந்த நிகழ்ச்சி ஒன்று உண்டு. காந்தியடிகள் ஒரு முறை ஷிமோகாவுக்குச் சென்றிருந்தார். அச்சமயம் அவரு டைய நெருங்கின நண்பர் ஒருவர் அவரிடம், "தாங்கள் ஜெரொசப்பா நீர்வீழ்ச்சியை அவசியம் காணவேண்டும்.

அதைக் காணவென்றே பலர் இப்பக்கம் வருகின்றனர்; தாங்களும் அவசியம் அங்குச் சென்று வரவேண்டும்" என்று வற்புறுத்தினர். "எனக்கு அதிக வேலை இருக்கிறதே" என்றார் அடிகள். "தங்களுக்கு ஓய்வு ஏது? இவ்வளவு அருகில் வந்த பின்பு அதைக் காணாமல் திரும்பக் கூடாது. இந் நீர்வீழ்ச்சியின் தோற்றம் உலகத்திலேயே ஒரு அற்புதம்; இது நயாகரா நீர்வீழ்ச்சியைக்காட்டிலும் ஆறுமடங்கு உயரமுள்ளது" என்றார் நண்பர். "பூ, இவ்வளவுதானா? மழைநீர் வானத்திலிருந்து கொட்டுகிறதே! அதைக் காட்டிலும் இது ஒரு அற்புதமா?" என்று மறுமொழியளித்தார் அடிகள். இச்சம்பவம் காந்தியடிகளின் நுண்ணறிவையும் நகைச்சுவையையும் விளக்குகின்றது.

1. அரும் பொருள்: எழில் - அழகு. பயங்காம் - பயத்தை விளைவிக்கக் கூடியது. இருமருங்கு - இருபுறங்கள். கமழும் - வீசும். ரீங்காரம் - சப்தம். வர்ணஜாலங்கள்- வர்ணங்களின் சேர்க்கையால் உண்டாகும் அற்புதங்கள். மந்திகள் - பெண் குரங்குகள்.

2. கேள்விகள் :
   1. ஜெரொசப்பா நீர்வீழ்ச்சி எங்குள்ளது ?
   2. அந் நீர்வீழ்ச்சிக்கு எவ்வாறு செல்ல வேண்டும்?
   3. சாராவதி நதியை எப்படிக் கடக்கலாம் ?
   4. நீர்வீழ்ச்சிக்குச் செல்லும் பொழுது காணும் காட்சிகள் யாவை?
   5. நீர்வீழ்ச்சி எத்தனை பிரிவுகளாக விழுகின்றது? அவை யாவை ?
   6. இந் நீர்வீழ்ச்சி சம்பந்தமான நிகழ்ச்சி யாது ?

3. பயிற்சி :

1. கம்பீரம், பேரிரைச்சல், வானவில், வர்ண ஜாலம், ஆடம்பரம் - இச்சொற்களை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

2. நீ கண்ட ஒரு நீர்வீழ்ச்சியைப் பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுது.

4. இலக்கணம்: இப்பாடத்தில் வந்துள்ள பத்து பெயர்ச் சொற்களுக்குத் திணை, பால், எண் எழுது.

# 8. நவராத்திரி

| | | |
|---|---|---|
| தொடர் | சீவராசிகள் | அணிகள் |
| பிரதி | ஆக்கல் | காலட்சேபம் |
| தொன்றுதொட்டு | அளித்தல் | பவனி |
| சன்மானம் | பதுமை | நூல்வல்லார் |

1. இந்துக்கள் ஆண்டு தோறும் கொண்டாடும் விழாக்களில் நவராத்திரி ஒரு முக்கியமான விழாவாகும். இவ்விழாவிற்கென, பள்ளிகளுக்கு விடுமுறை அளிக்கப்படுகிறது. பொங்கல், தீபாவளி முதலிய பண்டிகைகளைப்போல் இதுவும் முக்கியமானதே யாகும். 'நவராத்திரி' என்ற தொடருக்கு 'ஒன்பது இரவுகள்' என்பது பொருள்.

2. பிரதி ஆண்டிலும் புரட்டாசித் திங்களில் அமாவாசைக்குப் பின்பு நவமித் திதி வரையில் ஒன்பது நாட்

கள் இவ்விழா தொடர்ந்து கொண்டாடப்படும்; பத்தாவது நாளையும் சேர்த்து இவ்விழாவைத் **தசரா** என்றும் சொல்லுவார்கள். தமிழகத்தில் இவ்விழா தொன்று தொட்டு கொண்டாடப்பட்டு வருகிறது. அரசர்களை நாடி வரும் புலவர்களுக்கு இவ்விழாக் காலங்களில் சன்மானங்கள் அளிக்கப்பட்டு வந்தன.

3. இவ்வுலகத்திலுள்ள எல்லாச் சீவராசிகளையும் படைத்து இயக்குகிறவர் கடவுள். அவர் **ஆக்கல், அளித்தல், அழித்தல்** என்ற முத்தொழில்களைப் புரிந்து வருகிறார். **பிரமன்** என்ற உருவில் கடவுள் சகல சீவராசிகளையும் படைக்கிறார்; **திருமால்** என்ற உருவில் யாவரையும் காத்து அருள்புரிகிறார்; **உருத்திரன்** என்ற உருவில் அழிக்கும் தொழிலைச் செய்கிறார். அக்கடவுளின் சக்திகளும் மூன்று வகை உருவேற்றுமைகள் உடையவர்கள். பிரமன் மனைவி **சரசுவதி**; சரசுவதியைக் **கலைவாணி** என்றும் சொல்லுவார்; அவள் கல்விக்குத் தலைவி. திருமாலின் மனைவி இலக்குமி, அவள் செல்வத்திற்கும் ஆயுளுக்கும் ஆரோக்கியத்திற்கும் அதிதேவதை. உருத்திரன் மனைவி **துர்க்கை**; துர்க்கையைக் **கொற்றவை** என்றும் வழங்குவர். அவள் வீரத்தையும் வெற்றியையும் கொடுக்கும் தெய்வம். மக்களுக்கு அறிவும், செல்வமும், வீரமும் இன்றிமையாதவை. இவற்றைப் பெற விரும்பியே இந்துக்கள் இவ் விழாவைக் கொண்டாடுகின்றனர்.

4. முதல் மூன்று நாட்களில் மக்கள் துர்க்கையைப் பூசிப்பர்; இடையிலுள்ள மூன்று தினங்கள் இலக்குமியை வணங்குவர்; இறுதி மூன்று நாட்கள்

கலைவாணியை வழிபடுவார்கள். அவ்விழாக் காலத்தில் இந்துக்களின் வீடுகளில் இம்மூன்று தேவியரின் உருவச் சிலைகளோ அல்லது படங்களோ வைத்துப் பூசை செய்யப்படும். இக்கொலுவைப் பல விதங்களில் அழகு பெறச் செய்வார்கள்; பல பதுமைகளை இக்கொலுவில் வைப்பார்கள்; தீபாலங்காரங்கள் செய்வார்கள். பதுமைகளுக்குப் பல அணிகளும் ஆபரணங்களும் பூட்டுவார்கள். மாலைநேரங்களில், பெண்கள் பட்டாடைகளும் ஆபரணங்களும் அணிந்து கொண்டு, பிறர் வீடுகளுக்குச் சென்று, கொலுக்கூடங்களைக்கண்டு களித்து, வீடு திரும்புவார்கள்.



5. தினந்தோறும் வீடுகளில் சத்கதாகாலட்சேபங்களும் பூஜையும் நடைபெறும். ஒன்பதாம் நாள் ஒவ்வொருவரும் தமக்கு உதவும் ஆயுதங்களையும், நூல்களையும் கொலுவில் வைத்துப் பூசிப்பர். கல்வியில் ஆர்வமுள்ளவர்கள் புத்தகங்களுக்குப் பூசை செய்வார்கள்;

தொழிலாளிகள் தங்களுடைய ஆயுதங்களுக்குப் பூசை செய்வார்கள். இதைச் சரசுவதி பூசை அல்லது ஆயுத பூசை என்பர்.

6. பண்டைக்காலத்திலிருந்தே அரசர்கள் இவ் விழாவைச் சிறப்பாகக் கொண்டாடி வருகிறார்கள். அந்நாட்களில் அவர்கள் கொலுவிருந்தும், பவனி வந்தும் குடிமக்களுக்குக் காட்சி அளிப்பார்கள்; நூல்வல்லா ருக்குத் தகுந்த பரிசுகளை வழங்குவார்கள்.

7. பத்தாவது நாள் வெற்றிக்குரிய நாள் ஆகும். அந்நாள் விஜயதசமி என்ப் பெயர் பெறும். அது குழந் தைகளுக்குக் கல்வி கற்பிக்கத் துவக்கும் நன்னாளாகக் கருதப்படுகிறது; புதிய தொழில்களைத் துவக்கவும் அது சிறந்த நாளாகக் கருதப்படுகிறது.

1. அரும்பொருள் : பிரதி - ஒவ்வொரு. தொன்று தொட்டு - பழங்காலமுதல். சன்மானம் - பரிசு. சீவ ராசிகள் - உயிர்வகைகள். ஆக்கல் - படைத்தல். அளித்தல் - காப்பாற்றுதல். அணிகள் - அணியப்படு பவை. பவனி - ஊர்வலம். நூல்வல்லார் - அறிஞர்.

2. கேள்விகள் :

1. நவராத்திரி விழா எப்பொழுது நடைபெறும்?
2. கடவுள் செய்யும் மூன்று தொழில்கள் யாவை?
3. மும்மூர்த்திகளுடைய மனைவிமார் யாவர்?
4. நவராத்திரி விழா ஏன் கொண்டாடப்படுகிறது?
5. நவராத்திரி விழா எவ்வாறு கொண்டாடப்படு கிறது?
6. 'விஜயதசமி' நாள் எதற்கு உகந்தது?

3. பயிற்சி :

1. நீ உன் வீட்டில் பொங்கல் விழாவைக் கொண்டாடினது பற்றி உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுது.

2. தொன்று தொட்டு, காலட்சேபம், பொம்மைக் கொலு, பவனி, நூல்வல்லார், இன்றியமையாதது - இச்சொற்களை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

3. பதுமை, அணி, கொலுக்கூடம், ஆயுதம், நாள், விழா-இச்சொற்களுக்குப் பன்மைகளை எழுது.

4. கீழுள்ள வாக்கியங்களில் உள்ள தடித்த சொற்களைப் பெயர்ச்சொல், வினைச்சொல் எனப் பிரித்து எழுது:

1. அவன் ஓடுகிறான். இது ஓடு வேயப்பட்ட வீடு.
2. குழந்தை பால் குடிக்கிறது. சோமு என் வீட்டில் குடி இருக்கிறான்.
3. இது எலி வளை. இராமன் வில்லை வளைக்கிறான்.
4. கோமதி பாடுகிறாள். சங்கரன் பாடுபடுகிறான்.
5. இது செம்மறி ஆடு. கமலா ஊஞ்சல் ஆடுகிறாள்.

4. இலக்கணம் : சொற்கள் தன்மை, முன்னிலை, படர்க்கை என்ற மூன்று இடங்களில் வழங்கப்பெறும்.

தன்மை இடம் — யான், நான், யாம், நாம், யாங்கள், நாங்கள்.

முன்னிலை இடம் — நீ, நீர், நீங்கள்.

படர்க்கை இடம் — அவன், அவள், அவர், இவள், இவன், இவர், அது, அவை, இது, இவை.

## 9. இளந் தமிழனுக்கு

| | | | |
|---|---|---|---|
| தரணி | அகில | தலை நிமிர்ந்து | நானிலம் |
| இணையிலா | கமழ் | சரிதை | நீண்ட |
| அண்டம் | சேவை | அமிழ்தம் | |

தமிழன் என்ற பெருமையோடு
தலை நிமிர்ந்து நில்லடா!
தரணி எங்கும் இணையிலா உன்
சரிதை கொண்டு செல்லடா!
அமிழ்தம் என்ற தமிழின் ஓசை
அண்ட முட்ட உலகெலாம்
அகில தேச மக்களுங் கண்டு
ஆசை கொள்ளச் செய்துமேல்
கமழ் மணத்தின் தமிழில் மற்ற
நாட்டிலுள்ள கலையெலாம்
கட்டி வந்து தமிழர் வீட்டில்
கதவிடித்துக் கொட்டியே
நமது சொந்தம் இந்த நாடு
நானிலத்தில் மீளவும்
நல்ல வாழ்வு கொள்ளச் சேவை
செய்து வாழ்க நீண்ட நாள்!

—நாமக்கல் கவிஞர்.

1. அரும்பொருள் :- தரணி - பூமி. இணையிலா - சமானம் இல்லாத. அண்டம் - ஆகாயம். கமழ் - வீசும்.

2. கேள்விகள் :

   1. தமிழன் பூமி எங்கும் எதைப் பரப்பவேண்டும்?
   2. பிறநாட்டுக் கலைகளைத் தமிழன் என்ன செய்ய வேண்டும்?
   3. நமது நாடு எவ்வாறு இருக்கவேண்டும்?

3. பயிற்சி :

   1. இணையிலா, தலை நிமிர்ந்து, சேவை, தரணி - இச் சொற்களை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.
   2. தமிழன் தமிழ் மொழிக்குச் செய்ய வேண்டிய சேவை என்ன?
   3. கீழ்வருவனவற்றைப் பொருத்தமாகச் சேர்க்க :-

| | |
|---|---|
| மங்களம் | விளையாடுகிறார்கள் |
| பெண்கள் | துணி துவைக்கிறான் |
| வண்ணான் | கும்மி அடிக்கிறார்கள் |
| பிள்ளைகள் | 'கா,கா, என்று கத்துகின்றன |
| காகங்கள் | கோலம் போடுகிறாள் |

# 10. பிளாரன்ஸ் நைட்டிங்கேல்

| | | | |
|---|---|---|---|
| சுபாவம் | தாதி | சீர்கேடு | மேற்பார்வை |
| அனுதாபம் | தொண்டாற்றி | திகைப்பு | விடுதி |
| நற்குடிமகன் | அநாதை | சலியா | நற்றெண்டு |
| இல்வாழ்க்கை | யுத்தகளம் | பணிவிடை | நல்வரவு |
| ஆடம்பரம் | | | |

1. பிளாரன்ஸ் நகரிலிருந்து இங்கிலாந்தில் குடியேறிய மிக்க செல்வம் படைத்த ஒரு பெரும் குடும்பத்தில் 1820-ஆம் ஆண்டில் நைட்டிங்கேல் அம்மையார் பிறந்தார். இளமைப் பருவத்தில் அம்மையார் பல மேல் நாட்டு மொழிகளையும், கணிதம், சங்கீதம் முதலான கலைகளையும் செவ்வனே கற்றுணர்ந்தார். அவருடைய தந்தையார் தமது மகளுடைய கல்வியில் பெரிதும் ஊக்கம் காட்டினர். தம் மகளை அவர் பிற நாடுகளுக்கும் தம்முடன் அழைத்துச் சென்று, பல காட்சிகளை நேரில் காணும்படி செய்தார்.

2. இளமையிலிருந்தே அம்மையார் இரக்கமான சுபாவம் உள்ளவர்; ஏழைகளிடம் அன்பும் அனுதாபமும் கொண்டவர்; தம்மாலியன்ற உதவிகளை ஏழை எளியோருக்குச் செய்வதில் கருத்துக் கொண்டிருந்தார். அவர் நாள் தோறும் சுற்றுப் புறங்களிலுள்ள ஏழைகளின் வீடுகளுக்குச் சென்று அவர்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்தும், நோயாளிகளைக் கவனித்தும் வருவார். இத் தொண்டு அவருக்கு அளவில்லா இன்பம் அளித்தது.

3. தகுந்த வயதை அடைந்ததும் நற்குடிமகன் ஒருவனை மணந்து அம்மையார் இல்வாழ்க்கை நடத்த வேண்டுமெனப் பெற்றோர் விரும்பினர். ஆனால்



அம்மையார் அவர்கள் விருப்பத்திற்கு இணங்கவில்லை; தாதித் தொழில் கற்று நோயாளிகளுக்கு உதவ வேண்டுமென அவர் உளங் கொண்டார். அக்காலத்தில் பெண்களில் பலர் தாதித்தொழிலை விரும்பவில்லை; அதுமிகவும் இழிவான தொழிலெனக் கருதப்பட்டு வந்தது. ஆதலால் பெற்றோர்களும் உறவினரும் அம்மையாருடைய மனத்தை மாற்றப் பெரிதும் முயன்றனர். ஆனால் அம்முயற்சி பயனளிக்க வில்லை.

4. இறுதியில், அம்மையாரின் பெற்ரோர் அவரைத் தாதித் தொழிலில் பயிற்சி பெற்று வர ஜெர்மனி நாட்டிற்கு அனுப்பினர். அங்கே அத்தொழிலின் நுட்பங்களையும், வைத்தியசாலைகளை நிர்வகிக்கும் முறைகளையும் அம்மையார் செவ்வனே கற்றறிந்தார். அவர் லண்டன்மாநகரம் திரும்பி வந்ததும், அங்கிருந்த ஒரு வைத்தியசாலையில் தாதியாக அமர்ந்து தொண்டாற்றி வந்தார்.

5. இவ்வாறு இருக்கையில், ருஷ்யாவுக்கும் இங்கிலாந்துக்கும் போர் மூண்டது. அப்போரில் ஆங்கிலேயப் போர் வீரர் பலர் காயமுற்று அநாதைகளாக மாண்டு போயினர். அதை யறிந்த நைட்டிங்கேல் அம்மையார், அரசாங்கத்தாரின் அனுமதி பெற்று யுத்தகளத்திற்குப் புறப்பட்டார். தம்முடன் அவர் முப்பத்தேழு தாதிமார்களை அழைத்துச் சென்ருர். காயமுற்றவர்களுக்குச் சிகிச்சை செய்யத் தேவையான பொருள்களையும் எடுத்துச் சென்ருர்.

6 யுத்தகளத்தைச் சார்ந்த வைத்திய விடுதி மிகக் கேவலமான நிலைமையில் இருந்தது; காயமடைந்தோருக்கு ஏற்ற வசதிகள் காணப்படவில்லை; நிர்வாகம் சீர்கேடாக இருந்தது. அதைக் கண்டு அம்மையார் திகைப்படையாமல், தாமதமின்றித் தேவையான சிகிச்சைகளைச் செய்யத் தொடங்கினர்; மற்றத் தாதிமார்களும் அவருக்குத் துணையாக இருந்து தொண்டு புரிந்தனர். அவர்களுடைய சலியா உழைப்பினுல் சின்னுட்களில் வைத்திய விடுதி சீரடைந்தது; காயமுற்ரோரும் குணமடையலாயினர்.

7. வைத்திய விடுதியில் நோயாளிகளுக்குத் தேவையான சுத்தமான உடைகளை அளிக்க அம்மையார் ஏற்பாடு செய்தார்; நல்ல உணவும் அவர்களுக்கு வழங்கினார். நோயாளிகளுக்குத் தேவையான பணிவிடைகள் தமது மேற்பார்வையிலேயே நடக்க ஏற்பாடு செய்தார். அவர் நோயாளிகளுக்குச் சிகிச்சை செய்வதோடு மட்டும் நிற்கவில்லை; அவர்கள் உறவினர்களுக்குக் கடிதங்கள் எழுதுவார்; அவர்கள் விரும்பும் வசதிகள் யாவையும் செய்து கொடுப்பார். பிரதிதினமும் இரவில் ஒரு சிறு விளக்கைக் கையிலேந்தி, விடுதி முழுவதும் சென்று, ஒவ்வொரு நோயாளியையும் கண்டு, புன்சிரிப்புடன் உரையாடித் தமது விடுதிக்குத் திரும்புவார். அவருடைய வருகை நோயாளிகளுக்குப் பெருமகிழ்ச்சியைக் கொடுத்தது.

8. ஓய்வின்றி இடைவிடாமல் வேலை செய்ததன் பயனாக அம்மையார் நோய் வாய்ப்பட்டார். அச்சமயத்தில் போர் முடிவுற்றது; அமைதி ஏற்பட்டது. ஆகவே அம்மையார் தமது நாட்டுக்கு வந்து சேர்ந்தார். அம்மையார் நாட்டுக்குச் செய்த நற்றொண்டை ஆங்கில மக்கள் அறிந்திருந்தமையால், அவருக்கு நல்வரவு கூறப் பெரிய ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். ஆனால் ஆடம்பரத்தை வெறுத்த அச்சீமாட்டி, யாவரும் அறியாவண்ணம் தமது ஊரை யடைந்தார். அம்மையாரின் தொண்டினை அறிந்த விக்டோரியா மகாராணியார், அவருக்கு இரு இரத்தினப் பதக்கம் பரிசாக அளித்தார். துருக்கி நாட்டு மன்னன் அவருக்கு ஒரு இரத்தின மாலையை வெகுமதியாக அளித்தான்.

9. அம்மையாரின் பெயரால் மக்கள் ஒரு நிதி திரட்டினார்கள்; அதை அவருக்குப் பரிசாக அளிக்க விரும்பினார்கள். ஆனால் அம்மையார் அதை ஏற்க மறுத்தார். அத்தொகையைக் கொண்டு தாதித் தொழிலில் பயிற்சி அளிக்கும் சாலை ஒன்றை ஏற்படுத்தினர். அதன் பிறகுதான் தாதித் தொழில் உலகில் மதிப்படைந்தது; உலகெங்கணும் நோயாளிகளைக் கவனிக்கத் தாதிகளை அமர்த்துதல் தொடங்கப்பட்டது. சில ஆண்டுகளுக்குப் பின் அம்மையார் உயிர் துறந்தார்.

10. அம்மையார் இவ்வுலக வாழ்வை நீத்துப் பல ஆண்டுகள் ஆயின; ஆயினும் அவருடைய தொண்டினை உலகமக்கள் என்றென்றும் மறக்க இயலாது; இவ்வுலகம் உள்ளவரை அவருடைய பேரும் புகழும் நிலைத்து நிற்கும் என்பதில் ஐயமில்லை.

1. அரும் பொருள் :

சுபாவம் - இயற்கை. அனுதாபம் - இரக்கம். தொண்டாற்றி - ஊழியம் செய்து. அநாதை - சார்ந்திருக்க ஒருவரும் இல்லாதவன். பணிவிடை - ஊழியம். ஆடம்பரம் - வெளிப்பகட்டு.

2. கேள்விகள் :

1. இளமையில் அம்மையார் எதை விரும்பினார்?
2. நைட்டிங்கேல் அம்மையாருக்கு எத்தொழிலில் விருப்பம் உண்டாயிற்று?
3. அம்மையார் தாதித்தொழிலில் எங்கே பயிற்சி பெற்றார்?

4. யுத்தகளத்தில் அம்மையார் எவ்வாறு சேவை செய்தார்?
5. நோயாளிகட்கு அம்மையார் செய்த உதவிகள் யாவை?
6. அம்மையாருக்குக் கிடைத்த பரிசுகள் யாவை?
7. தாதித் தொழில் உலகில் எப்பொழுது மதிப் படைந்தது?

3. பயிற்சி :

1. உனக்குப் பிடித்தமான தொழிலைப் பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுது.
2. எதிர் பால் எழுது - தாயார், நற்குடிமகன், தம்பி, கணவன், வேலைக்காரன், இராணி, சுல்தான்.
3. சீர்கேடு, அநாதை, இல்வாழ்க்கை, பணிவிடை, நற்றொண்டு—இவற்றை உன் சொந்த வாக்கியங் களில் அமைத்து எழுது.
4. பின்வரும் வாக்கியங்களை ஒன்று சேர்த்து ஒரே வாக்கியமாக எழுது.
அம்மையார் தாய்நாடு திரும்பினார். அவரைக் கவுரவிக்க வேண்டும் என்று மக்கள் விரும்பினார் கள். அம்மையார் அதை விரும்பவில்லை; ஒருவ ரும் அறியாதபடி தமது இல்லம் அடைந்தார்.

4. இலக்கணம் :

முற்றுப்புள்ளி, ஆச்சரியக்குறி, காற்புள்ளி, அல் லது கமா, கேள்விக்குறி என்ற குறிகளைப் பற்றி உங் களுக்குத் தெரியும். இவை தவிர இன்னும் சில குறி

களும் உண்டு. அவை அரைப்புள்ளி (;), முக்காற்புள்ளி (:), மேற்கோள் குறிகள் ("....") என்பனவாம்.

இப்பாடத்தில் காற்புள்ளியும் முக்காற் புள்ளியும் இடப்பட்டுள்ள இடங்களைக் கவனி.

ஒருவர் பேசும் சொற்களைப் பேசுகிறவாறே எழுதும் பொழுது மேற்கோள் குறிகளை உபயோகிக்கிறோம். (உ-ம்) அம்மையார் நோயாளிகளைப் பார்த்து, "ஐயோ! பாவம்! இவர்கள் வருந்துகிறார்களே!" என்று துக்கப்பட்டார்.

## 11. என் கதை - நிலக்கரி

| | | | |
|---|---|---|---|
| புயற்காற்று | கனல் | துப்பாக்கி | நாகரிகம் |
| பூகம்பம் | இயங்கும் | பீரங்கி | விலக்கும் |
| பொருட்படுத்த | ஆக்கவேலை | சுரங்கம் | ஊழியம் |
| பராபரமே | பெரும் அளவில் | | |

1. முன்னொரு காலத்தில் உலகில் பெரும் பகுதி காடாக இருந்தது. அக்காட்டில் நான் தோன்றினேன். மரங்கள் அடர்ந்த காடுகளில் காலப்போக்கினாலும், புயற்காற்றினாலும், பூகம்பங்களாலும் பல மரங்கள் மண்ணில் வீழ்ந்து தரைக்குள் புதைந்து போயின. புதைந்த மரங்கள் தரைக்குள்ளே பல ஆண்டுகள் அழுந்தி இருந்து என்போல் உருப்பெற்றன. இதுவே என்னுடைய தோற்றத்தின் கதை.

2. பல ஆண்டுகள் மக்கள் என்னைப் பொருட்படுத்தவே இல்லை. மேல் நாட்டு மக்களில் சிலர் என்னைக் கண்டெடுத்துக் குளிர் காய்வதற்கு உபயோகித்

தனர். மண்ணில் புதைந்து கிடந்த நான் வெளியே வந்ததும் மனம் மிக மிக மகிழ்ந்தேன். என் கனவில் மக்கள் பலர் குளிர்காய்ந்தனர். நாளடைவில் தொழி லாளிகளுக்கு நான் உபயோகப்படலானேன். ஆதலால் பலர் என்னைப் பெரும் அளவில் காண விரும்பினர்.

3. ஜனகனுடைய யாகசாலையில் ஏர் உழும் பொழுது கிடைத்த சீதாதேவியைப் போல் என்னை



மக்கள் விரும்பித் தரைக்குள்ளிருந்து வெட்டி எடுத் தனர். அன்று ஜனகன் சீதையைக்கண்டு மனம் மகிழ்ந்தான்; இன்று மக்கள் என்னைக் கண்டு மகிழ்ந் துள்ளார்கள். ஆனல் மனிதர்களால் எளிதில் என்னை வெட்டி எடுக்க முடியவில்லை. முதலில் கோடாரியால் என்னை வெட்டி எடுத்தனர்; பின்பு மிருகங்களின் உதவி யால் என்னை வெளியிற் கொண்டுவந்தனர்; பின்பு மின்சாரத்தின் சக்தியாலும் நீராவியின் உதவியாலும் நான் வெகு எளிதில் அகப்பட்டேன்.

4. ஆனால் நான் உலகில் தன்னந்தனியாக வாழ வில்லை; இரும்பு என் உயிர் நண்பன். நாங்கள் ஒன்றாக வேலைசெய்தால் மட்டும் இயந்திரங்கள் இயங்கும். என் உதவியால் தான் என் நண்பனாகிய இரும்பை உருக்கி இயந்திரங்களாகச் செய்யமுடியும்; இயந்திரங்களையும் என் சக்தியால்தான் இயக்க முடியும். எங்களைப் பிரித்து வைத்தால் இயந்திரங்கள் கிடைக்கமாட்டா; நான் இல்லாவிடில் இரும்பு உயிர் வாழாது. கப்பல்களும், புகை வண்டிகளும் பல வகை நீராவி இயந்திரங்களும் என்னால்தான் இயங்குகின்றன.

5. நான் பல ஆக்கவேலைகளைச் செய்கின்றேன் எனினும், அழிக்கும் வேலைகளைச் செய்யவும் உதவு கிறேன். துப்பாக்கிகளும் பீரங்கிகளும் என் உதவி யால் தான் பிறக்கின்றன. இரும்பை வளைத்தும், துளைத்தும், உருக்கியும், நீட்டியும் செய்வதற்கு எனக் குத் திறமை உண்டு. ஆதலால் நான் மக்கள் இனத் தைக் காட்டிலும் மேலானவன். ஏனெனில், இரும்பை உருக்க அவர்களால் இயலுமா?

6. என்னைக் காணப் பலர் பூமிக்குள்ளே குடைந்து கொண்டே போவார்கள். என் வீட்டைச் சுரங்கம் என்பார்கள் மக்கள். போதிய காற்றும் வெளிச்சமும் இல்லாமல் பலர் என் வீட்டில் துன்பப் பட்டார்கள். ஆனால் இப்பொழுது அவ்வாறில்லை; அக்குறைகள் நீக்கப்பட்டுள்ளன.

7. இது இயந்திர உலகம். நாகரிகத்தில் முன் னேற்ற மடைந்துள்ள மனிதர்கள் என் உதவியைப் பெரிதும் நாடுகிறார்கள். இயந்திரங்கள் இயங்குவதால் மக்களுக்குத் தேவையான பொருள்கள் பல குறைந்த

விலைக்குக் கிடைக்கின்றன. மக்கள் கடலை எளிதில் கடக்கவும், உள்நாட்டுப் பிரயாணம் விரைவில் செய்ய வும் பயன்படும். கப்பல்களையும் புகைவண்டிகளையும் இயக்க, என் உதவியை நாடுகின்றனர். எனக்குப் பகை வர் கூட உண்டு. மின்சாரமும், பெட்ரோல் எண்ணெயும் என் மதிப்பைக் குறைக்கின்றன. ஆயினும் பெரும் அளவில், என்னை விலக்கும் அளவிற்கு, அவை கிடைப்ப தில்லை. ஆதலால் நான் உலகோர்க்கு நிரந்தரமாக ஊழியம் செய்து வருவேன். 'என் கடன் பணி செய்து கிடப்பதே'. நான் இல்லாமல் மக்கள் இன்று இவ்வுலகில் இன்பமாக வாழ முடியாது. 'எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே யல்லாமல், வேறொன்று அறியேன் பராபரமே' என்று தாயுமானவருடன் சேர்ந்து பாடி என் கதையை முடித்துக் கொள்கிறேன்.

1 அரும்பொருள் :

கனல் - நெருப்பு. ஆக்கவேலை - படைக்கும் தொழில், சுரங்கம் - பூமிக்குள் குடையப்பட்ட இடம். இயங் கும் - வேலைசெய்யும். விலக்கும் - நீக்கும். பராபரம் - கடவுள்.

2. கேள்விகள் :

1. நிலக்கரி எங்கிருந்து கிடைக்கிறது ?
2. நிலக்கரியின் உபயோகம் என்ன ?
3. நிலக்கரி எவ்வாறு உண்டாகிறது ?
4. சுரங்கத்தில் என்ன கஷ்டம் நேரிடும் ?
5. நிலக்கரி செய்யும், அழிக்கும் வேலைகள் என்ன ?

3. பயிற்சி :

1. எதிர்ச் சொற்களை எழுது:-பெரும் பகுதி, குளிர், கண்டு, பிரித்து, ஆக்கவேலை.

2. நிலக்கரியின் கதையைப் போலவே இருப்பு தன் கதையைச் சொல்லுவதுபோல் எழுது.

3. முதல் பத்தியில் உள்ள வாக்கியங்களுக்கு எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் எழுது.

4. இப்பாடத்தில் வரும் பத்திகள் ஒவ்வொன்றுக்கும் தகுந்த தலைப்புக்கள் கொடு.

4. இலக்கணம்:

1. கோடிட்டுள்ள இடங்களில் பொருத்தமான நிறுத்தக் குறிகளை இடு:

ஆகா/என்ன இன்பம்/சுரங்கத்தின்று வெளியே நான் வந்ததும்/என்மேல் குளிர்ந்த காற்றுபட்டது/என்னைத் தள்ளுவண்டியில் கொட்டித் தள்ளிக்கொண்டு சென்றார்கள்/அங்கிருந்து என்னை இரயில் வண்டியில் தொழிற்சாலைக்குக் கொண்டு சென்றார்கள்/ அங்கே எனக்கு என்ன நேர்ந்தது/உங்களுக்குத் தெரியுமா/ என்று நிலக்கரி சொல்லிற்று/

2. சொற்களை எழுதும்பொழுதும், உச்சரிக்கும் பொழுதும் பிழை நேரிடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். பெரும்பாலும் ஒரே உச்சரிப்புடைய ர, ற; ல, ள, ழ, ன, ண, ந என்ற எழுத்துக்களின் உச்சரிப்புக்களையும் அவை எழுதப்படவேண்டிய இடங்களையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

| | | |
|---|---|---|
| எரி—எறி | அரம்—அறம் | பழம்—பலம் |
| கரி—கறி | மரம்—மறம் | வலை—வளை |
| தரி—தறி | காலை—காளை | அன்னம்—அண்ணன் |
| ஏரி—ஏறி | தொலை—தொளை | பந்து—பன்றி |

# 12. இறுதிப்பரிசு

| | | |
|---|---|---|
| மன்னிப்பு | அவ்வப்பொழுது | ஊடே |
| சம்பவம் | சீமான் | மன்றாடினார்கள் |
| யாத்திரை | அந்திப்பொழுது | சிந்தனை |
| வரலாறு | பேரிரைச்சல் | அதிருஷ்ட ஹீனன் |
| ஆங்காங்கு | உவகை | திடுக்கிட்டு |
| செல்வாக்கு | தத்தளித்து | கரம் |
| வெறி | சோகக்குரல். | நீர்மேல் குமிழி |

பிரயாகை,
5-5-1942

என் பிரிய நண்ப,

1. நான் சென்னையை விட்டுப் புறப்பட்டதுமுதல் இதுவரை என் பிரயாணத்தைப் பற்றி உனக்கு ஒரு விதச் செய்தியும் அளிக்காமல் இருந்தமைக்கு என்னை மன்னிப்பாயாக! அதி விரைவாக யாத்திரை செய்ததாலும், ஆங்காங்கு நேரிட்ட பல சௌகரியக் குறைவு களாலும், என்னால் உனக்கு கடிதம் எழுதமுடியவில்லை. உன் வேண்டுகோளை நான் மறக்கவில்லை. 'செல்லுமிடங்களில் காணும் பல அற்புதங்களைப்பற்றியும், கேட்கும் பல வியப்பிற்குரிய வரலாறுகளையும் அவ்வப் பொழுது நீ எனக்குத் தெரிவிக்கக் கோருகிறேன்' என்ற உன் விருப்பத்திற் கிணங்க, இக்கடிதம் எழுதலுற்றேன்.

2. இயற்கையின் எழில் மிக்க இன்பத்தைப் பருக இளவேனிற் காலமே ஏற்றது. உல்லாசமாகப் பொழுது போக்குவதற்கு இயற்கைக் காட்சிகளைக் காண்பதே போதுமானது. இயற்கையன்னையின் பல்வேறு தோற்றங்களையும் கிராமங்களில் தான் கண்டு களிப்படைய

இயலும். ஒரு நாள், அந்திப்பொழுதில், உள்ளத்திற்கு உவகை யூட்டும் வண்ணம், இந் நகருக்கு வெளியே பல வயல்களினூடே சென்று, ஒரு தோட்டத்தை யடைந்தேன். சற்று நேரத்தில் என்பார்வை அருகிலிருந்த ஒரு பாழுங் கிணற்றின் மீது விழுந்தது.

3. திடீரென்று ஒரு குரல் என் சிந்தனையைக் கலைத்தது. "தாங்கள் அக்குழந்தைகளின் உறவினரா?" என்ற கேள்வி என் மன அமைதியைக் குலைத்தது. அங்கே ஒரு கிழவனார் காட்டுப் பூக்களைக் கொய்து கொண்டிருந்ததைக் கண்டேன். "குழந்தைகளா? எங்கே?" என்றேன் திடுக்கிட்டு. "மன்னிக்க வேண்டும். அப்பாழுங் கிணற்றைத் தாங்கள் கூர்ந்து கவனித்ததால், அதில் சென்ற ஆண்டில் நடந்த ஒரு துயரம் மிக்க சம்பவம் தங்களுக்குத் தெரியும் என்று நினைத்தேன்" என்று கிழவனார் மறுமொழி புகன்றார். "எனக்கு ஒன்றும் தெரியாது; ஆனால் அவ்வரலாற்றினைக் கேட்க அவாவுள்ளவனாக இருக்கிறேன். அன்புகூர்ந்து அதைத் தெரிவிக்க வேண்டுகிறேன்" என்று நான் சொன்னதும், கிழவனார் சொல்லத் துவங்கினார்.

4. "பிரயாகையில் நளினசந்திரர் என்ற பிரபல வழக்கறிஞர் ஒருவர் இருந்தார். அவர் செல்வமும் செல்வாக்கும் மிகுந்த சீமான். அவருக்கு இரண்டு குழந்தைகள்; அவர்களை இரு கண்கள்போல் காப்பாற்றி வந்தார். அவர் தமது செல்வ நிலைக்கேற்ப, அவர்களுக்குத் தகுந்த வயதில் ஒரு ஆசிரியரை நியமித்துக் கல்வி கற்பிக்க ஏற்பாடு செய்தார்.

5. ஒரு நாள், சென்ற ஆண்டில், இயற்கைத் தோற்றங்களைக் கண்டு மனவமைதி பெறுவதற்கு, அவ்

வாசிரியர் அந்த இரு குழந்தைகளுடன் இத்தோட்டத் திற்குவந்தார். இவ்விடத்தில் காணப்படும் அமைதியை யும் எழிலையும் நாடித் தினமும் இங்கு அவர்கள் வரலாயி னர்.ஒருநாள் இரு குழந்தைகளும் இப்பாழுங்கிணற்றின் கரையில் உல்லாசமாக விளையாடிக் கொண்டிருந்தனர். ஆசிரியர் சற்றுத் தொலைவில் ஒரு புறம் உட்கார்ந்து ஏதோ ஒரு நூலைப்படித்துக் கொண்டிருந்தார்.



6. திடீரெனப் பேரிரைச்சல் ஒன்று கேட்டது; யாரோ தண்ணீரில் தடாலென்று விழுந்தது போன்ற சப்தம்; ஆசிரியர் உடனே ஓடி வந்து பார்த்தார். இரு குழந்தைகளில் இளையவன் – மோகன் என்பான் – பாழுங் கிணற்றின் கரையைச் சுற்றிச் சுற்றிக் கூச்ச லிட்டுக் கொண்டிருந்தான்; அவனுக்குச் சுமார் எட்டு வயது இருக்கலாம். 'அண்ணு! அண்ணு!' என்று அவன் கதறியபடி காட்சி அளித்தான். ஆசிரியர் கிணற்றை எட்டிப் பார்த்தார். பெரியவனுன அரவிந்தன் கிணற் றுக்குள்ளே தத்தளித்துக்கொண்டிருந்ததைக் கண்டார்

அக்கிணற்றின் தண்ணீர் மிகவும் ஆழத்தில் இருந்தது; பாசிபடர்ந்திருந்தது. ஆசிரியருக்கு ஒன்றுமே தோன்றவில்லை; ஆழ்ந்து யோசிக்காமல் உடனே கிணற்றில் குதித்தார்!

7. அவ்வளவு தான்! அவர் திரும்பி எழுந்திருக்கவேயில்லை! இதற்குள் கிணற்றில் விழுந்த அரவிந்தன், தண்ணீருக்கு மேலே கிளம்பிவந்து தன்கைகளை மேலே வீசினான். மேலே இருந்த சிறுவன் குனிந்து, தன் இரு கைகளையும் கிணற்றுக்குள் நீட்டினான்; அவற்றைக் கிணற்றிலிருந்து இருகைகள் கெட்டியாகப்பற்றிக் கொண்டன! 'பிழைத்தோம்' என இருவரும் ஆனந்தம் அடைந்தனர். ஆனால் சுவர் செங்குத்தாக இருந்ததால், அரவிந்தனால் மேல ஏறி வரமுடியவில்லை; மோகனால் அரவிந்தனைக் கரைக்கு இழுக்க இயலவில்லை. பளுவைத் தாங்க முடியாமல் மோகன் சிறிது சிறிதாகக்கிணற்றின் பக்கமாக நழுவி வர நேர்ந்தது. "ஐயோ! என்னால் இழுக்க முடியவில்லையே" என்று மோகன் கதறினான்; உரக்கக் கூவினான்; ஒரு உதவியையும் காணவில்லை.

8. மணிக்கணக்காக இரு குழந்தைகளும் தங்கள் உயிருக்கு மன்றாடினார்கள். "இது வீண் பிரயத்தனம்" என்பதை அரவிந்தன் உணர்ந்தான். இருள் சூழ்ந்தது! கிணற்றினுள்ளிருந்து அரவிந்தன், "தம்பி! மோகன்! என் ஒரு கையை விடு. என் கைக்கடிகாரத்தை உன்னிடம் கொடுக்கிறேன்" என்றான். அது அவனுக்கு ஒரு பரிசளிப்பு; அதை அருமையாக அவன் போற்றி வந்தான். அதை மிகக் கஷ்டத்துடன் கழற்றித் தன் தம்பியினிடம் அளித்தான். அதை மோகன் ஒரு கையால் வாங்கித் தன் அருகில் வைத்தான்.

9. இரவு மேலிட்டது; அதிருஷ்ட ஹீனர்களாகிய அவ்விரு குழந்தைகளின் மனத்தவிப்பை விவரிக்க இயலாது. இனியும் கரங்களைப் பிணைத்திருக்க முடியவில்லை. "தம்பி! நான் சென்று வருகிறேன். தாயாருக்கும் தந்தைக்கும் என் அன்பைத் தெரிவிக்கவும்" என்று சொன்னதுதான் தாமதம்! அவன் கைகள் சோர்ந்து விழுந்தன. அரவிந்தன் நீரில் மூழ்கி மறைந்தான் !

10. "அண்ணா! அண்ணா!" என்று இளையவன் கதறினான். அண்ணா வருவதேது! வெறிபிடித்தவன் போல ஓடினான். தந்தையிடம் செய்தியை வெளியிட்டான். பெற்றோர் தகுந்த உதவியுடன் பாழுங்கிணற்றை அணுகினார்கள். தண்ணீரை வடித்து இரு உடல்களையும் எடுக்க ஒரு நாள் ஆயிற்று. அக்காட்சியும் அத்துயரமான சம்பவத்தை மீண்டும் ஞாபகப் படுத்த அரவிந்தனுடைய இறுதிப் பரிசாகிய கடிகாரமும் பெற்றோர்களின் துக்கத்தைப் பன்மடங்கு அதிகரித்தன, எனக்கூறி முடித்தார் கிழவனார்.

11. இக் கதையைக் கேட்ட என் மனம் துக்கக்கடலில் ஆழ்ந்தது. எங்கும் இக்குழந்தையின் சோகக்குரலை என்காதுகளில் தொனித்தது. உலகவாழ்க்கை நீரின் மேற்குமிழி போன்றதல்லவா ?

உன் அன்பன்
"ருத்ரா"

1. அரும்பொருள் ;

அந்திப்பொழுது-மாலை. உவகை-சந்தோஷம். ஊடே-வழியாக. அதிருஷ்டஹீனன் - அதிருஷ்டமில்லாதவன். கரம் - கை. வெறி - பித்து. சோகக்குரல் - விசனக்குரல். நீர்மேல் குமிழி - நீரின்மேல் தோன்றி விரைவில் மறையும் இயல்புடையவை.

2. கேள்விகள் :

1. குழந்தைகளும் ஆசிரியரும் ஏன் தோட்டத்திற்கு வந்தனர் ?
2. அரவிந்தன் கிணற்றில் விழுந்தது ஆசிரியருக்கு எவ்வாறு தெரிந்தது ?
3. ஆசிரியர் ஏன் கிணற்றில் குதித்தார் ?
4. அரவிந்தன் எவ்வாறு உயிருக்கு மன்றாடினான் ?
5. அரவிந்தன் மோகனுக்கு அளித்த இறுதிப் பரிசு என்ன ?
6 அரவிந்தனுடைய இறுதி வார்த்தை என்ன ?

3. பயிற்சி :

1. உனக்கு நேரிட்ட ஒரு சம்பவத்தை விவரித்து உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுது.
2. அவ்வப்பொழுது, உவகை, சோகக்குரல், அந்திப்பொழுது, தத்தளித்து—இச் சொற்களை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

4. இலக்கணம் :

i. ஆசிரியர் மோகனைக் கண்டார்.
ii. அரவிந்தன் கடிகாரத்தை கொடுத்தான்.
iii. ஆசிரியர் புத்தகம் படித்துக்கொண்டு இருந்தார்.
iv. பெற்றோர் கிணற்றின் அருகில் வந்தனர்.
v. நாங்கள் நகருக்கு வெளியில் இருந்த தோட்டத்தை அடைந்தோம்.
vi. தோட்டத்தில் பூக்களும் மரங்களும் இருந்தன. இவற்றிலுள்ள ஐம்பால் பெயர்களை எழுது.

| | ஆண் பால் | பெண்பால் | பலர் பால் | ஒன்றின் பால் | பலவின் பால் |
|---|---|---|---|---|---|
| 1 | | | | | |
| 2 | | | | | |
| 3 | | | | | |
| 4 | | | | | |
| 5 | | | | | |
| 6 | | | | | |

# 13. கருணைக் கடல்



| | | | |
|---|---|---|---|
| அம்புவி | யாகசாலை | சேவித்து | செம்மை |
| அண்டி | பேய் | பின்னுள் | பொன்னுரை |
| கும்பி | பேறு | மும்மாரி | குவலயம் |
| மண்ணில் | வேந்தன் | | |

[புத்தர் மன்னன் பிம்பிசாரனுக்கு நன்மொழி கூறல்]

1. வாழும் உயிரினை வாங்கிவிடல்—இந்த
மண்ணில் எவர்க்கும் எளிதாகும்.
வீழும் உடலை எழுப்புதலோ—ஒரு
வேந்தன் நினைக்கிலும் ஆகாதையா!

2. அம்புவி மீதில் இவ்வாடுகளும்—உம்மை
அண்டிப் பிழைக்கும் உயிர் அலவோ?
நம்பி இருப்பவர் கும்பி—எரிந்திடில்
நன்மை உமக்கு வருமோ ஐயா?

3. தாயென நம்பி வரும் உயிரை—யாக
சாலை நடுவில் கிடத்தி யொரு

பேயெனக் கிறிப் பிளப்பதனுல்—என்ன
பேறும் பெருமையும் பெற்றீரையா?

## பிம்பிசாரனுடைய மறுமொழி

4. "செய்பிழையாவும் பொறுத் தருள்வீர்" எனச்
சேவித்து மன்னனும் தாழ்ந்து நின்ருன்.
"ஐயனே! நாட்டில் கொலை தவிர்த்து—நாளை
ஆணையும் கட்டுவேன்" என்றுரைத்தான்.

[அவ்வாறே பிம்பிசாரன் ஆணையிட்டான். நாட்டில் நலம் பெருகிற்று.]

5. அந்நாள் முதலாப் பின்னுள் எல்லாம்
மாதம் மும்மாரி வானம் பொழிந்தது;
நாடு செழித்தது; நகரம் சிறந்தது;
உண்மை யறிவும் உதயமாயது;
செம்மை வளர்ந்தது; தீமை தேய்ந்தது;
புத்தன் உரையைப் பொன்னுரையாக
நித்தம் நித்தம் நினைத்த பயனுய்க்
கொல்லா விரதம் குவலயத்து
எல்லா உயிர்க்கும் இன்பளித்ததுவே!

—தேசிகவிநாயகம் பிள்ளை

1. அரும்பொருள் :

அம்புவி - அழகான பூமி. அண்டி - சேர்ந்து. கும்பி- வயிறு. பேறு - சிறப்பு. செம்மை - நன்மை. குவலயம்- உலகம்.

2. கேள்விகள் :

1. புத்தர் மன்னனிடம் கூறிய நன்மொழிகள் யாவை?
2. பிம்பிசாரனுடைய மறுமொழி என்ன?

3. பிம்பிசாரனுடைய ஆணையால் நாட்டில் ஏற்பட்ட மாறுதல் என்ன ?

3. பயிற்சி :

1. பின்னாள், மண், செம்மை, ஆகாது, தாழ்ந்து, இன்பம் - இவைகளுக்கு எதிர்ச்சொற்களை எழுது.

2. ஆகாதையா, இவ்வாடு, பொன்னுரை, பொறுத்தருள்வீர் - இச்சொற்களைப் பிரித்து எழுது.

3. புத்தர் சரிதையைச் சுருக்கமாகப் பத்து வாக்கியங்களில் எழுது.

4. இலக்கணம் :

1. வேற்றுமை :

இடையன் வந்தான். இடையனைப் பார்த்தேன் இடையனால் அறிந்தேன். இவ்வாக்கியங்களில் இடையன் என்ற பெயர்ச்சொல் பொருள் வேறுபட்டு வருகிறது. இடையன் என்ற பெயர்ச்சொல்லின் பொருளை ஐ, ஆல் என்பவை வேறுபடுத்துகின்றன. இவைகளுக்கு வேற்றுமை உருபுகள் என்பது பெயர். வேற்றுமை எட்டு வகைப்படும்.

(உ-ம்) புத்தர் வந்தார் - முதல் வேற்றுமை.

புத்தரைக் கண்டேன் - இரண்டாம் வேற்றுமை.

| | |
|---|---|
| புத்தரால் ஆடுகள் பிழைத்தன.<br>புத்தரோடு இடையன் வந்தான்.<br>புத்தருடன் மன்னன் பேசினான். | இவற்றிலுள்ள ஆல், ஓடு, உடன் என்பவை மூன்றாம் வேற்றுமை உருபுகள். |

2. 12 ஆம் பாடத்தில் 5 ஆம் பத்தியில் உள்ள முதல் மூன்று வேற்றுமை உருபுகளை எடுத்து எழுது.

# 14. பாஞ்சாலங்குறிச்சி வீரன்



| | | | |
|---|---|---|---|
| பகைமை | நவாபு | பேட்டி | இருதிறத்தார் |
| பாளயக்காரர் | வாணிபம் | திட்டம் | வரவேற்று |
| தென்னுடு | முற்பட்டார்கள் | அவமதித்தான் | குற்றவாளி |
| கப்பும் | அடிபணிந்தனர் | தகர்க்கப்பட்டு | விசாரணை |
| தூக்கில் | புகழுடம்பு | | |

1. ஒரு நாட்டின் அமைதியைக் குலைப்பதும், அந் நாட்டை அந்நியருக்கு அடிமைப் படுத்துவதும், அந் நாட்டு மக்களிடையே தோன்றும் ஒற்றுமையின்மையும் பகைமை உணர்ச்சியுமே யாகும். இக்காரணங்களால் நமது இந்தியா பல்லாண்டுகள் அந்நியருக்கு அடிமைப்

பட்டிருந்தது. ஆயினும் இடியின் நடுவில் அவ்வப்பொழுது மின்னல் தோன்றி மறைவது போல, மக்களிடையே, சுதந்தர வீரர்கள் சிலர் தோன்றி, அந்நியருக்கு அடிமைப்படுவதை வெறுத்து, அவர்களை எதிர்த்துப் போராடியுள்ளனர். அத்தகைய வீரர்களில் **கட்ட பொம்மன்** என்பவர் ஒருவர்.

2. கட்டபொம்மனுடைய முழுப்பெயர் **வீரபாண்டியக் கட்டபொம்மன்**. இவர் 1760-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் மூன்ரும் தேதியன்று பிறந்தார். இவர் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள **பாஞ்சாலங்குறிச்சி** என்ற நாட்டின் மன்னர். தமது முப்பதாம் வயதில் பாஞ்சாலங்குறிச்சி மன்னராக இவர் முடி சூடினூர். அக்காலத்தில் இவரைப் போன்ற சிற்றரசர்களுக்குப் **பாளயக்காரர்** எனப்பெயர் வழங்கியது. தென்னுட்டில் இவரைப்போலப் பல பாளயக்காரர்கள் இருந்தனர். அவர்கள் யாவரும் ஆர்க்காட்டு நவாபுக்குக் கப்பம் செலுத்தி வந்தனர். ஆயினும் ஆர்க்காட்டு நவாபு வலிமையற்று இருந்தபடியால், அவருக்கு ஒருவரும் ஒழுங்காகக் கப்பம் செலுத்தவில்லை.

3. அக்காலத்தில் ஆங்கிலேயர் **கிழக்கிந்தியக் கம்பெனி** என்ற பெயரால் நம் நாட்டினருடன் வாணிபம் செய்து வந்தனர். அவர்கள் அடிக்கடி ஆர்க்காட்டு நவாபுக்குக் கடன் வழங்கி வந்தனர். கடனைத் திருப்பிக் கொடுக்கச் சக்தியற்றிருந்த நவாபு, பாளயக்காரரிடம் தாம் பெற்று வரும் கப்பத் தொகையை வசூலித்துக் கொள்ளும் உரிமையை, ஆங்கிலேயருக்குக் கொடுத்து விட்டார். இதன் பயனுக ஆங்கிலேயர் பாளயக்காரரிடம் வரிவசூல் செய்ய முற்பட்டார்கள்.

4. பாளயக்காரரிடையே ஒற்றுமை இல்லை; ஒருவரை யொருவர் பகைத்துக் கொண்டும், பொருமை மிகுந்தும் இருந்தனர். ஆதலால் அவர்கள் ஆங்கிலே யரை எதிர்த்து நிற்கவில்லை. பலர் கப்பம் செலுத்தி ஆங்கிலேயரிடம் அடி பணிந்தனர். ஆனால் கட்டபொம் மன் மட்டும் கப்பம் செலுத்த மறுத்து விட்டார். அது கண்ட வெள்ளையர் கட்டபொம்மனிடம் இன்சொல் பேசி, கப்பத்தொகையை வசூலிக்க முயன்றனர்; ஏனெனில் வீரபாண்டியர் வலிமை மிகுந்தவர். ஆனால் வீரபாண்டியர் அவர்களுக்கு இணங்கி வரவில்லை.

5. அச்சமயம் ஜாக்ஸன் என்பான் திருநெல்வேலி கலெக்டராக இருந்தான். தன்னை வந்து காணவேண்டு மென்று அவன் வீரபாண்டியருக்கு ஒரு கடிதம் வரைந்து அனுப்பினான். வீரபாண்டியரும் அவனைக் காண விரைந்து சென்றார். ஆனால் ஜாக்ஸன் அவருக்கு எளி தில் பேட்டி அளிக்கவில்லை; பல ஊர்களுக்கு அவரை அலைய வைத்தான்; முடிவில் இராமநாதபுரத்தில் அவர் தன்னைக் காணும்படி செய்தான். அங்கு வீரபாண்டி யரைச் சிறை செய்யத் திட்டம் செய்தான். தன்னைக் காண வந்தவரை அவமதித்தான்; அவரைப் பிடித்துச் சிறையிடும்படி தன் படை வீரருக்குக் கட்டளையிட் டான். ஆனால் வீரபாண்டியர் தம்மை எதிர்த்தவர்களை வெட்டி வீழ்த்தித் தமது தம்பியருடன் பாஞ்சாலங் குறிச்சி சேர்ந்தார்.

7. ஜாக்ஸன் பொறுப்பற்றவன் என்று, கம்பெனி யார் அவனை நீக்கி, லூஷிங்டன் என்பானைக் கலெக்டராக நியமித்தனர். அவன் ஒரு பெரும் படையைப் பாஞ் சாலங் குறிச்சிக் கோட்டையைத் தாக்கும்படி அனுப்பி னான். வெள்ளையருடைய பீரங்கிகள் கோட்டையின்

மீது குண்டுகளைப் பொழிந்தன. கோட்டை வாயில் தகர்க்கப்பட்டு, ஆங்கிலப்படைவீரர் கோட்டைக்குள்ளே புகுந்தனர். இருதிறத்தாருக்கும் கை கலந்த போர் நடந்தது. ஏழு மணி நேரம் போர் நடந்த பின்பும் வெள்ளையருக்கு வெற்றி கிடைக்கவில்லை ; படை வீரர் பலர் மாண்டனர்.

7. கம்பெனியின் மேலதிகாரியைக் கண்டு பேசினால், போர் நிறுத்த வழி ஏற்படும் என்று நினைத்து, வீரபாண்டியர், இரவோடு இரவாகத் தம்பிமாருடன் கோட்டையினின்றும் வெளியேறிச் சென்றார். அடுத்த நாள் வெள்ளையர் கோட்டையை எளிதில் கைப்பற்றினார்கள் ; தப்பிபோடிச் சென்ற கட்டபொம்மன் முதலானோரைப் பிடித்து வரக் குதிரைப் படையினரை ஏவினார்கள்.

8. தப்பிச் சென்ற வீரபாண்டியர் தமது நண்பரான புதுக்கோட்டை மன்னருடைய மாளிகையில் மறைந்திருக்க எண்ணி, அவரை நாடிச் சென்றார். புதுக்கோட்டை மன்னர் வீரபாண்டியரை வரவேற்று விருந்தளித்தார். ஆனால், ஆங்கிலேயருக்கு உடனே செய்தி அனுப்பி, அவர்களிடம் அவரைக் காட்டிக் கொடுத்தார்.

9. 1799 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 16-ம் நாள் கட்டபொம்மன் குற்றவாளியாக விசாரணை செய்யப்பட்டார். விசாரணையில் அவர் குற்றவாளி எனத் தீர்மானிக்கப்பட்டு, கயத்தாறு என்ற விடத்தில் தூக்கில் இடப்பட்டார். ஆனால் அன்று அவருடைய உடல் மட்டும் அழிந்தது ; அவருடைய உள்ளத்தில் ஊன்றி நின்ற சுதந்தர உணர்ச்சியை அவர்களால் அழிக்க இயலவில்லை. தமிழகத்தின் தனிபெரும் வீரராகச் சுதந்தரப் போரைத் துவக்கிய வீரபாண்டிய

கட்டபொம்மன், இன்றும் புகழுடம்புடன் நம்மிடையே உலவி வருகிறார் !

1. அரும்பொருள் :-

வாணிபம் - வியாபாரம். முற்பட்டார்கள் - முன் வந்தார்கள். பேட்டி - காணுதல். தகர்க்கப்பட்டு - உடைக்கப்பட்டு.

2. கேள்விகள் :-

1. ஆங்கிலேயர் வரிவசூல் செய்யும் உரிமையை எப்படி, எவரிடமிருந்து பெற்றனர் ?
2. கட்டபொம்மனின் ஆங்கிலேயர் பகைக்குக் காரணம் என்ன ?
3. ஜாக்ஸன் கட்டபொம்மனுக்கு என்ன இடையூறு செய்தான் ?
4. பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை எவ்வாறு ஆங்கிலேயர் வசம் ஆயிற்று ?
5. கட்ட பொம்மன் ஏன் பாஞ்சாலங்குறிச்சியை விட்டுச் சென்றார் ?
6. கட்டபொம்மன் ஆங்கிலேயரிடம் எப்படி அகப்பட்டார் ?
7. வீரபாண்டியரின் முடிவு என்னவாயிற்று ?
8. வீரபாண்டியருடைய புகழுக்குக் காரணம் என்ன ?

3. பயிற்சி :-

1. வருமானம், புகழ், இணங்கி, விரைந்து, அவமதிப்பு, வெற்றி, நிறுத்த - இச் சொற்களுக்கு எதிர்ச் சொற்கள் எழுது.

2. அடிமைப்பட்டிருந்தது, சிற்றரசர், சக்தியற்றிருந்த, மேலதிகாரி - பிரித்து எழுது.

4. இலக்கணம் :-

1. வேற்றுமை (தொடர்ச்சி) :

நவாபுக்குப் பாளயக்காரரில் பலர் கப்பம் கட்டினர் - [கு:- நான்காம் வேற்றுமை உருபு.

பழங்களில் சிறந்தது மாம்பழம். சென்னையிலிருந்து அக்காள் வந்தாள். } இல், இருந்து: ஐந்தாம் வேற்றுமை உருபுகள்.

கட்டபொம்மனது இருப்பிடம் பாஞ்சாலங் குறிச்சி - வீரபாண்டியருடைய அரண்மனை நேர்த்தியானது. } அது, உடைய : ஆறும் வேற்றுமை உருபுகள்.

கோட்டையில் பலவீரர் இருந்தனர். இரஞ்சனிடம்மோதிரம்இருக்கிறது. தோட்டத்தின்கண் பூக்கள் உள்ளன. } இல், இடம், கண் : ஏழாம் வேற்றுமை உருபுகள்.

எட்டாம் வேற்றுமைக்குத் தனி உருபு இல்லை. படர்க்கைப் பெயரை முன்னிலையாக்கி அழைப்பதே எட்டாம் வேற்றுமை. இதை விளிவேற்றுமை என்றும் சொல்வர்.

(உ-ம்) குழந்தை — குழந்தாய்!
மன்னன் — மன்ன!
பிள்ளை — பிள்ளாய்!

2. இப் பாடத்தில் காணப்படும் வேற்றுமைப் பெயர்களை வகைப்படுத்தி எழுது.

3. கோடிட்டுள்ள இடங்களில் தகுந்த வேற்றுமைகளை அமை.

(அ) வீரபாண்டியர் கலெக்ட்ர்——— கண்டார்.
(ஆ) கட்டபொம்மன்——— தம்பிமார் சென்றனர்.

(இ) தம்பியர்———கோபம் வந்தது.
(ஈ) வீரர்——சிறந்தவர் வீரபாண்டியர்.
(உ) வீரபாண்டியர்———புகழ்என்றும் அழியாதது.
(ஊ) வீரபாண்டியர்———பல வீரர் இருந்தனர்.
(எ) வீரபாண்டியர்——! உமது வரவு நல்வரவு [ஆகுக!

## 15. தாவரங்கள்

| | | |
|---|---|---|
| நிலைபெற்று | வனமஹோற்சவம் | கணக்கற்றவை |
| ஆண்டவன் | தொகுத்து | உண்கலம் |
| ஜந்துக்கள் | கண்ணுற்று | வற்புறுத்தி |
| பாதசாரி | பொந்துகள் | கடமை |

1. மரம், செடி, கொடி முதலியவை **தாவரங்கள்** எனப்படும். இவை தாமாகவே இயங்குவதில்லை; தோன்றும் இடத்திலேயே நிலைத்து நிற்கும். இயற்கையில் பலவகை மரங்களும், பலவிதச் செடிகளும், பல மாதிரிக் கொடிகளும், புல் பூண்டுகளும், பாசி வகைகளும் காணப்படுகின்றன.

2. மரங்களில் பல வகை உண்டு. அவற்றைத் தொகுத்துக் கணக்கிட்டுச் சொல்லமுடியாது. உலகின் பல பாகங்களில் வெவ்வேறு வகை மரங்கள் உள்ளன. சில உயரமானவை; சில குட்டையானவை; சில தடித்தவை; சில ஒல்லியானவை; சிலவற்றிக்குக் கிளைகளுண்டு; சிலவற்றிற்குக் கிளைகள் இல்லை. மரங்கள் காடுகளில் அடர்த்தியாகக் காணப்படும். பூமத்திய ரேகைக்கு அருகில் உள்ள பிரதேசங்களில் இத்தகைய

அடர்ந்த காடுகள் பல உள்ளன. இப்பிரதேசங்களில் வெப்பமும் மழையும் அதிகமாக இருக்கும். ஒரு நாட்டில் பருவகால மழை சரியாகப் பெய்வதற்கு அந்நாட்டிலுள்ள மரங்களும் காரணமாகும். மரங்களில்லாத



வறண்ட பாலேவனத்தில் மழை பொழிவதில்லே. ஆதலால் காடுகளே நாம் பாழ்படுத்தக் கூடாது. தேவைக்கு அதிகமாகக் காடுகளே அழிக்கக்கூடாது. ஆதலால், நமது நாட்டில் மரங்களே வைத்து வளர்க்கவேண்டும் என்று நமது நாட்டுத் தலேவர்கள் வற்புறுத்தி வருகிருர்கள். உங்கள் பள்ளியிலும் நாட்டின் பல பாகங்களிலும் வனமஹோற்சவம் கொண்டாடினீர்கள் அல்லவா? நாட்டின் நன்மைக்கே பல மரங்களே நட்டு வளர்த்து வருகிறேம்.

3. மரங்களால் வேறு பல நன்மைகளும் உண்டு. மரப்பட்டைகள் சில மருந்து வகைகளுக்கு உபயோகப்படுகின்றன : மலேரியாவுக்குக் கைகண்ட மருந்தாகிய கோயின, சிங்கோன என்ற மரத்தின் பட்டையாகும்.

ரப்பர், ரப்பர் மரங்களிலிருந்து கிடைக்கும் பாலிலிருந்து செய்யப்படுகின்றது. உலகின் சில பகுதிகளில் பசுப் பாலைப்போன்ற பாலைக் கொடுக்கும் மரங்களும் உள்ளன என்று சொல்லப்படுகிறது. மரங்களை வெட்டி, அறுத்துக் கூழாக்கிக் காகிதங்கள் செய்கிறார்கள். மரப் பலகைகளாலும் மரத்துண்டுகளாலும் பல பொருள்கள் செய்யப்படுகின்றன; கப்பல்கள் செய்யவும், வண்டிகள் செய்யவும் மரம் தேவையாக இருக்கிறது. பர்மா, ஸ்வீடன் முதலான நாடுகளில் மரங்களாலேயே வீடுகள் கட்டப்படுகின்றன. மரங்களைப் பிளந்து அடுப்பெரிக்க விறகுகளாக உபயோகிக்கிறோம். இலைகளை உண்கலங் களாகப் பயன் படுத்துகிறோம். நிழல் தரும் மரங்கள் பாதசாரிகளுக்குப் பேரின்பம் அளிக்கின்றன. அசோகச் சக்ரவர்த்தியும், இராணி மங்கம்மாளும் சாலைகளில் பல நிழல் தரும் மரங்களை நட்டு வளர்த்தார்கள் அல்லவா? குளக்கரைகளிலும், கோயில்களிலும், நந்தவனங்களிலும் ஆலமரங்களையும் அரசமரங்களையும் வேப்பமரங்களை யும் காண்கிறோம் அன்றோ?

4. பழம் தரும் மரங்கள் பல உண்டு. மா, பலா, வாழை, மாதுளை முதலியன பழம் தரும் மரங்களுட் சில. இவை அளிக்கும் இனிய கனிகள் மக்களுக்கு உணவாகின்றன. தென்னை, பனை, ஈந்து முதலிய மரங் களால் உண்டாகும் நன்மைகள் கணக்கற்றவை. செடி களும் கொடிகளும் மரங்களைப்போலவே நமக்குப் பேருதவி புரிகின்றன. இனிய காய்கனிகளை அவை நமக்கு அளிக்கின்றன. நறுமணம் வீசும் பலவிதமான புஷ்பங்கள் நமக்கு ஆனந்த மூட்டுகின்றன. இவற்றின் இலைகளையும் காய்கனி வகைகளையும் உண்டு கோடிக் கணக்கான சீவராசிகள் வாழ்ந்து வருகின்றன. கணக்

கிலடங்காப் பறவைகள் மரங்களில் கூடுகள் கட்டி வாழ்கின்றன. மரப் பொந்துகளில் அநேக சீவராசிகள் வசிக்கின்றன.

5. மரம், செடி, கொடிகள் மற்றொரு பெருநன்மையைக் கொடுக்கின்றன. நாம் வெளிவிடும் அசுத்தக் காற்றில் கலந்துள்ள கரியமில வாயுவைத் தாவரங்கள் உட்கொண்டு, நமக்குச் சுத்தமான காற்றைக் கொடுக்கின்றன. பூமியிலுள்ள அசுத்தமான பொருள்களை எருவாக அவை உட்கொள்ளுகின்றன.

6. தாவரங்கள் இல்லாமல் மக்களும் மற்ற சீவராசிகளும் உயிர் வாழ்தல் முடியாது. அவற்றால் உண்டாகும் நன்மைகள் கணக்கிலடங்கா; அவற்றின் வகைகள் எண்ணத் தொலையா! ஆண்டவன் அருளாலும், மக்களின் உழைப்பினாலும் தாவரங்களின் இனம் பெருகி, எல்லாச் சீவராசிகளுக்கும் அளவில்லா இன்பம் ஊட்டுகின்றன. ஆண்டவன் படைப்பில் உள்ள பல விநோதங்களையும், அவற்றால் அடையும் பயனையும் கண்ணுற்று, அவருக்கு நாம் என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளோம்.

1. அரும்பொருள்:-

தொகுத்து - ஒன்று சேர்த்து. உண்கலம் - உண்ணும் பாத்திரம். ஆண்டவன் - கடவுள். கண்ணுற்று - பார்த்து.

2. கேள்விகள் :-

1. மரங்களை வளர்ப்பதால் பயன்கள் யாவை?
2. மரங்களால் உண்டாகும் நன்மைகள் யாவை?
3. மரங்களால் பறவைகளுக்கு என்ன உபயோகம்?
4. தாவரங்கள் நமக்குச் செய்யும் பெருநன்மை யாது?

5. நாம் ஏன் ஆண்டவனுக்கு நன்றி செலுத்த வேண்டும்?

3. பயிற்சி.

1. தென்னை மரத்தால் உண்டாகும் பயன்களை எழுது.

2. தொகுத்து, கடமை, நன்மை, நறுமணம், வெவ்வேறு - இச் சொற்களுக்கு எதிர்ச்சொற்களை எழுது.

3. நிலைபெற்று, வற்புறுத்தி, உண்கலம், கண்ணுற்று, கடமை—இச் சொற்களை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

4. இப்பாடத்தில் நான்காவது பத்தியில் வந்துள்ள வேற்றுமை உருபுகளை வகைப்படுத்தி எழுது.

4. இலக்கணம்.

1. ஒரு தொழிலைச் செய்யும் நேரத்திற்குக் காலம் என்பது பெயர். வந்தான், வருகிறான், வருவான் என்ற வினைச்சொற்கள் வருதல் என்ற தொழிலைக் குறிக்கின்றன. 'வந்தான்' என்பதில் உள்ள 'வருதல்' என்ற தொழில், முன்பே நடைபெற்று முடிந்தது. 'வருகிறான்' என்பதில் தொழில். இப்பொழுது நடைபெறுகிறது. 'வருவான்' என்பதில் தொழில் இனி நடக்கப் போகிறது. தொழில் நடந்து முடிந்த காலத்தை இறந்தகாலம் என்றும், தொழில் நடைபெறுகின்ற காலத்தை நிகழ்காலம் என்றும் தொழில் நடக்கும் காலத்தை எதிர்காலம் என்றும் சொல்லுவர்.

2. பின்வரும் வாக்கியங்களில் உள்ள வினைச்சொற்களின் காலத்தை எழுது.

1. நான் மரங்களை வளர்த்தேன்.
2. மரங்கள் இங்கே நன்றாக வளர்கின்றன.
3. பூகம்பத்தினால் மண்ணில் புதைந்த மரங்கள் நிலக்கரியாக மாறும்.
4. நான் தினமும் பழம் தின்று வந்தேன்.
5. இன்று பழங்களின் விலை அதிகமாக இருக்கின்றது.
6. ஒரு கூடைப் பழங்கள் அனுப்பும்படி என் தம்பிக்கு எழுதுவேன்.
7. மரத்தின் நிழல் பாதசாரிக்கு இன்பம் அளிக்கிறது.
8. நான் தினமும் தோட்டத்தில் விளையாடுவேன்.

## 16. முதல் உதவி

| | | | |
|---|---|---|---|
| **மானிடவாழ்க்கை** | **குப்புற** | **கவிழ்ந்து** | **எதிர்பாராத** |
| **முட்டு** | **மல்லாந்து** | **முதலுதவி** | **மருத்துவர்** |
| **விலாப்புறம்** | **களைய** | **கொப்புளம்** | **அங்குமிங்கும்** |
| **செந்நிறம்** | | | |

*1. மானிட வாழ்க்கையில் எதிர்பாராத வகையில் திடீரென்று மக்களுக்குப் பல விபத்துக்கள் நேரிடுவதுண்டு. நெருப்பு, நீர் முதலியவைகளாலும், இடறி விழுந்து காயம் ஏற்படுவதாலும் பல துன்பங்கள் உண்டாகின்றன. விபத்து நேரிட்ட இடத்தில் மக்கள் திரண்டு கூடி, ஏதும் செய்ய வகையறியாது விழிப்பர். சிலர் மருத்துவரை அழைத்துவரச்செல்வார்கள். ஆனால்*

மருத்துவர் வருமுன், விபத்து அடைந்தவருக்கு மேலும் துன்பம் நேரிடும் ; அதனால் உயிரையும் இழக்கநேரிடும். ஆதலால், மருத்துவர் வருவதற்குமுன், விபத்து நேரிட்ட





வருக்குச் சில உதவிகள் செய்ய வேண்டும். இவ்வாறு செய்யப்படும் உதவிக்கு **முதல் உதவி** என்பது பெயர் ; இதை ஆரம்ப சிகிச்சை என்றும் சொல்லலாம்.

2. கொதி நீர் அல்லது கஞ்சி நமது உடலில் பட்டால் உடனே கொப்புளம் உண்டாகும். அவ்வாறு நேரிட்டால், கொப்புளம் தோன்றிய விடத்தில் சுண்ணும்பு நீருடன் தேங்காய் எண்ணெயைக் கலந்து தடவ வேண்டும். பின்பு அதன் மேல் பஞ்சு வைத்துத் துணி

யைச் சுற்றிவிடவேண்டும். சிறிய காயத்தினுல் இரத்தம் வெளிவந்தால், உடனே அவ்விடத்தைத் தண்ணீரினுல் சுத்தம் செய்து, அதன் மேல் ஒரு ஈரத்துணியைச் சுற்றிக் கட்டவேண்டும்.

3. திடீரெனத் தண்ணீரில் ஒருவர் மூழ்கி விட்டார் என்ருல், அவரை உடனே கரையின்மேல் எடுத்துப் போடவேண்டும். அவருக்கு மூச்சு வராதிருந்தால், அவரைக் குப்புறப் படுக்க வைக்கவேண்டும்; மூக்கும் வாயும் தரையில் படாத வண்ணம் அவருடைய கை ஒன்றைத் தலைக்கு முட்டுக் கொடுத்து வைக்க வேண்டும். அவருடைய மார்பின் கீழே சட்டை, கம்பளிமுதலியவற்றைச் சுற்றி வைக்கவேண்டும். பின்பு, அவர் பக்கமாகக் குனிந்து, நமது இருகைகளையும் அவருடைய விலாப்புறங்களில் வைத்து உறுதியாக அழுத்த வேண்டும். அப்பொழுது காற்று வெளிவரும். அவர் நன்ருக மூச்சு வாங்கும் வரையில் அவருடைய விலாப்புறங்களைத் தடவிக் கொண்டே இருக்க வேண்டும். பின்பு அவருடைய கைகளிலும் கால்களிலும் கைக்குட்டையால் அழுத்தித் தேய்த்து அவருடைய உடலில் சூடு உண்டாக்க வேண்டும். குடிப்பதற்குச் சூடான பானம் அளித்தல் நலம். அதற்குள் மருத்துவர் வந்து கவனிப்பார்.

4. திடீரென்று ஒருவருடைய ஆடையில் தீப் பற்றிக் கொண்டால், அவரை அங்குமிங்கும் ஓடவிடக் கூடாது. அவ்வாறு ஓடினுல், காற்றின் உதவியால் தீ அதிகரிக்கும். முன்புறம் தீப் பிடித்தால், உடனே கவிழ்ந்து படுக்க வேண்டும்; பின்புறம் தீப்பற்றினுல், மல்லாந்து படுத்துக் கொள்ளவேண்டும்; உடலைச் சுற்றிலும் தீப்பற்றிக் கொண்டால் உடனே தடித்த துணி

யால் மூடவேண்டும். தீப்பற்றி எரியும்பொழுது தண்ணீர் ஊற்றுதல் பிழையாகும்.

5. தீ அணைந்த பின், தீப்பற்றியவர் மீதுள்ள ஆடைகளை மெதுவாகக் களையவேண்டும். புண்பட்டுள்ள இடங்களில் உள்ள ஆடையை எண்ணெய் தடவி எடுக்க வேண்டும். வெந்த இடங்களில், சுண்ணாம்பு நீருடன் தேங்காய் எண்ணெயைக் கலந்து இலேசாகத் தடவ வேண்டும்.

6. காயம் ஏற்பட்டால் இரத்தம் வெளிப்படும். காயம்பட்ட இடத்திற்கு மேல் ஒரு கைக்குட்டையைக் கட்டவேண்டும்; அதன்மேல் ஒரு சிறு குச்சியை வைத்து முடிந்து முறுக்க வேண்டும். அவ்வாறு செய்தால் இரத்தம் கசியாமல் நிற்கும்.

7. இவ்வாறு முதல் உதவி செய்வதை நாம் தெரிந்துகொண்டால், விபத்திற்குள்ளான மக்களைக் காப்பாற்றக் கூடும். மருத்துவருடைய வேலை எளிதாகும்; விபத்துக்குட்பட்டவர்களும் விரைவில் துன்பம் நீங்கிச் சுகம் அடைவார்கள்.

1. அரும்பொருள் :

மருத்துவர் - வைத்தியர். களைய - நீக்க. மல்லாந்து - மேலேபார்த்து.

2. கேள்விகள் :-

1. விபத்து நேரிட்டால் மக்கள் என்ன செய்கின்றனர் ?
2. 'முதல் உதவி' என்றால் என்ன ?
3. கொதிநீர் உடலில் பட்டால் உடனே என்ன செய்ய வேண்டும் ?

4. திடீரென்று ஒருவன் நீரில் மூழ்கி விட்டால் என்ன செய்ய வேண்டும்?

5. ஆடையில் தீப்பற்றிக் கொண்டால் செய்ய வேண்டிய முதல் சிகிச்சை என்ன?

6. காயத்தினால் உண்டாகும் இரத்தப் பெருக்கைத் தடுக்க என்ன செய்ய வேண்டும்?

3. பயிற்சி.

1. மானிடவாழ்க்கை, அங்குமிங்கும், முட்டு, விலாப் புறம், கலையு - இவற்றை உன் சொந்த வாக்கியங் களில் அமைத்து எழுது.

2. சேர்த்து எழுது: செம்மை + நிறம், விபத்திற்கு + உள்ளான, வராது + இருந்தால், கை + குட்டை, கத்தி + காயம், ஈரம் + துணி.

3. இப்பாடத்தில் ஐந்தாம் பத்தியிலுள்ள வேற் றுமை உருபுகளை வகைப்படுத்தி எழுது.

4. இலக்கணம்.

1. செய்வினை - செயப்பாட்டு வினை :

பானுமதி இரத்தத்தைத் துடைத்தாள் - இதில் துடைத்தாள் என்ற வினை அல்லது தொழில், பானு மதி செய்த வினை. ஆதலின், துடைத்தாள் என்பது செய்வினை. இரத்தம் பானுமதியால் துடைக்கப்பட் டது - இதில் துடைக்கப்பட்டது என்ற தொழில், பானுமதியால் செய்யப்பட்ட தொழில். ஆதலின் துடைக்கப்பட்டது என்பது செயப்பாட்டு வினை.

2. கீழ்வரும் செய்வினைகளைச் செயப்பாட்டு வினை களாக மாற்று:-

1. சரோஜா கஞ்சியைக் கொட்டினாள்.

2. காயத்திற்கு நான் மருந்து தடவினேன்.

3. நான் அவனைக் குப்புறத் தள்ளினேன்.
4. ஆண்டவன் நம்மைக் காப்பாற்றுவார்.
5. வஸந்தா பொம்மையை உடைத்தாள்.

## 17. பிராமணனும் புலியும்



| | | |
|---|---|---|
| மூப்பு | நண்ணி | பொலிதரும் |
| தருப்பை | வேட்கை | குருதி |
| நாப்புடை | வெந்துயர் | உவகை |
| மறைவலாளன் | பூசுரன் | சேறு |

1 மூப்புடைப் புலிதானொன்று மூழ்கியோர் ஏரியின்கீழ்க்
காப்புடன் தருப்பை தன்னைக் கையில் வைத்திருக்
[கும் போது
நாப்புடை மறைவ லாளன் நண்ணியவ் வழியிற்
[செல்லக்
கூப்பிடல் செய்தன் னோனைக் குறித்தந்தப் புலிதான்
[கூறும்:

2. 'அந்தணு! இந்தக் காப்பை யளிப்பனீ வா' என் [ருேதச்
சிந்தையில் வேட்கை கூர்ந்து, செப்புவான்: 'புலி [யாரே! நீர்
வெந்துயர்க் கொலைமாந் தர்க்கு விளைப்பது விட்டுத் [தானம்
எந்தநல் வழியிற் செய்வீர்?' எனக்கதைக் கூறு [கென்ருன்.

3. புலியது கேட்டு, 'நானே, பூசுரா! நகமும் பல்லும்
இலன்; கிழம் ஆனேன்; பாவம் இழைப்பது விடுத்து [நாளும்
பொலிதரு தானஞ் செய்கை பொருளெனக் கொண் [டேன்;
சலமதில் மூழ்கி வந்து தருமிதைக் கொண்டுபோ!' [என்ன,

4. 'நன்றென' மறையோன் மூழ்க நண்ணினுன்; ஏரி [நீரில்
அன்றவன் கால்கள் சேற்றில் அழுந்திடத் திகைத்து [நின்ருன்;
சென்றது புலி, 'நான் உன்னைச் சேற்றினின் றெடுப் [பேன்,' என்னக்
கொன்றது குருதி தன்னைக் குடித்தது உவகை [பொங்க.

—வீரமார்த்தாண்ட தேவர்

1. அரும் பொருள் :-
மூப்பு - முதுமைப் பருவம். மறைவலாளன் — வேதங்களில் வல்லவன். நண்ணி - அருகில் வந்து.

வேட்கை - ஆசை. பூசுரன் - அந்தணன். குருதி - இரத்தம். உவகை - சந்தோஷம்.

2. கேள்விகள் :-

1. புலி அந்தணனைக் கூப்பிடுமுன் என்ன செய்தது?
2. புலி அந்தணனிடம் என்ன சொல்லிற்று ?
3. அந்தணன் புலியை என்ன கேட்டான் ?
4. புலி எவ்வாறு அந்தணன் தன்னை நம்பும்படி செய்தது ?
5. புலியின் சொற்களைக் கேட்ட அந்தணன் செய்தது என்ன ?
6. புலி எவ்வாறு அந்தணனைக் கொன்றது ?

3. பயிற்சி :-

1. இக் கதையைச் சுருக்கமாக எழுது.
2. அந்தணனுக்கும் புலிக்கும் நடந்த உரையாடலை மேற்கோள் குறிகள் இட்டு எழுது.
3. சிறு வாக்கியங்களாகப் பிரித்து எழுது:

தருப்பையையும் காப்பையும் கையில் வைத்துக் கொண்டிருந்த ஒரு கிழப்புலி, அவ்வழியே சென்று கொண்டிருந்த ஒரு அந்தணனைக் கண்டு, "அந்தணரே! இக் காப்பினைப் பெற்றுக் கொள்ளும்" எனக் கூவி அழைத்தது.

# 18. இயேசுநாதர்

| | | |
|---|---|---|
| நன்னாள் | கொட்டில் | மரித்த |
| தூய்மையான | மகவு | சூழ்ச்சி |
| தெய்வீகம் | சிசு | நற்பண்புகள் |
| உறவாடுவார்கள் | இடையூறு | அறைந்தனர் |
| ஆத்மசக்தி | மோகம் | மூடநம்பிக்கை |
| துரோகம் | சடங்குகள் | சிலுவை |

1. பிரதி வருடமும் டிசம்பர் மாதம் இருபத்தைந்தாம் தேதி கிறிஸ்தவர்கட்கு ஒரு பண்டிகை நாள் ஆகும். பல்லாண்டுகட்கு முன் இயேசுநாதர் என்ற பெரியார் அந்நாளில் பிறந்தார். அந்நாளை ஒரு நன்னாளாகக் கிறிஸ்தவர்கள் கொண்டாடுகின்றனர். அன்று அவர்கள் தூய்மையான ஆடைகளை அணிந்து கோயிலுக்குச் செல்வார்கள். அங்கே அவர்களுடைய வேதமாகிய 'பைபில்' என்ற நூலில் சில பகுதிகளைப் படிப்பார்கள். கிறிஸ்துவைப் புகழ்ந்து பாடல்கள் பாடுவார்கள். பின்பு வீடு சென்று, ஒருவரை யொருவர் கண்டு உறவாடுவார்கள். அன்று நண்பர்களை அழைத்து விருந்து அளிப்பார்கள். இயேசு கிறிஸ்துநாதர் யார்? அவர் ஏன் மக்களால் கொண்டாடப்படுகிறார்?

2. பாலஸ்தீனம் என்ற நாட்டில், பெத்லஹேம் என்னும் நகரத்தில் இயேசுநாதர் என்ற பெரியார் பத்தொன்பது நூற்றாண்டுகளுக்கு முன் அவதரித்தார். அவருடைய தந்தையார் ஜோசப் என்பவர்; அன்னையார் மேரி என்பவர். ஜோசப்பும் மேரியும் நாசரத் என்னும் நகரிலிருந்து பெத்லஹேமுக்குப் பிரயாணம் செய்தபொழுது, ஒரு மாட்டுக் கொட்டிலில் மேரிக்கு ஒரு ஆண்

மகவு பிறந்தது. அம்மகவே இயேசுநாதர். அம்மகவு பிறந்தபொழுது சில அதிசயத்தோற்றங்கள் அந்நாட்டில் காணப்பட்டன.

3. குழந்தை பிறந்த வரலாற்றைக் கேள்விப்பட்ட அந்நாட்டு மன்னன், தனக்கு அச்சிசுவினால் இடையூறு நேரிடும் என்று அஞ்சி, அதைக் கொல்லப் பல சூழ்ச்சிகள் செய்தான். இதனையறிந்த இயேசுவின் பெற்றோர், அக்குழந்தையுடன் எகிப்து நாட்டுக்குச் சென்றனர்; அம்மன்னன் மரித்தபின்பு,மீண்டும்தாய்நாடு திரும்பினர்.

4. கிறிஸ்து, தமது பன்னிரண்டாவது வயது முதல் கோயிலுக்குச் சென்று சாத்திரங்களைப் பயின்றார்; அவற்றின் பொருள்களைப் பற்றிக் குருமார்களுடன் வாதம் செய்து வந்தார்; அதனால் விவேகமும் பல நற்பண்புகளும் படைத்தவராக விளங்கினார்; பல மேன்மக்களுடன் பழகி, ஆத்மசக்தி பெற்றார்; கடவுளிடம் அன்பும், பணிவும், பக்தியும் பூண்டு ஒழுகி வந்தார்.

5. தமது முப்பதாம் ஆண்டு வரையில் நாட்டு மக்களுக்குப் பல நற்போதனைகள் செய்து வந்தார். அக்காலத்தில் அந்நாட்டு மக்கள் மூடநம்பிக்கைகளில் மூழ்கி இருந்தனர்; வீண் சடங்குகளில் காலத்தைச் செலவிட்டனர். அச் சடங்குகளை விடுத்துக் கடவுளிடம் உண்மைப் பக்தி கொண்டு வாழவேண்டும் என்று போதித்து வந்தார். தமது தெய்வீகச் சக்தியினால் ஊமையைப் பேசவைத்தல், நோயாளிகளைச் சுகம் பெறச் செய்தல், மாண்டவர்களை உயிர் பெறச் செய்தல் போன்ற அற்புதங்களை நிகழ்த்தினார்.

6. "ஆண்டவனுடைய ஆணையின்பேரில் இவ்வுலகில் அவருடைய ஆட்சியை நிலை நிறுத்த நான் அவதரித்துள்ளேன்" என்று இயேசுநாதர் அடிக்கடி சொல்லி

வந்தார். மூட நம்பிக்கையில் மோகம் கொண்ட குரு மார் அவரைப் பகைத்தனர். அவருடைய சொற்களைச் சுட்டிக்காட்டி, "இவன் நாட்டு மன்னனுக்குத் துரோகம் செய்பவன்" என்று இயேசுநாதர் பேரில் அவர்கள் குற்றம் சாட்டினார்கள். நியாய சபையில் விசாரணை நடந்தது. அதன் பயனாக, இயேசுநாதர் சிலுவையில் அறையப் பட்டார்.

7. ஜெருசலம் என்ற நகரின் அருகில் இருந்த ஒரு மேட்டு நிலத்தில் ஒரு மரச்சிலுவை நாட்டப்பட்டது;



அதில் இயேசுநாதரைச் சேர்த்துக் கட்டி இரும்பு ஆணிகளால் அறைந்தனர். ஆனால் இயேசுநாதர் சிலுவை மீதிருந்தவாறே கடவுளை வணங்கி, "தந்தையே! இவர்

கள் அறியாமல் செய்யும் இக் குற்றத்தைப் பொறுத்து இவர்களை மன்னிக்கும்படி வேண்டுகிறேன்" எனப் பிரார்த்தித்து, இவ்வுடலை நீத்து, ஆவியாக ஆண்டவரிடம் சேர்ந்தார். மரித்த மூன்றும் நாள் உயிர் பெற்று எழுந்து, தமது சீடருக்குக் காட்சி யளித்து மறைந்தார்.

8. தம்மைக் கொலைசெய்யப் புகுந்த பகைவரிடமும் இயேசுநாதர் காட்டிய கருணைக்கு ஈடு ஏதேனும் உண்டா? அவருடைய தன்னலமற்ற சேவையையும், அன்பின் பெருக்கையும் கண்டு, அவரிடம் பக்தி பூண்டு, அவர் காட்டிய வழியைப் பலர் பின்பற்றி வருகின்றனர். உலகத்தில் தோன்றிய மகான்களில் இயேசுநாதரும் ஒருவர். அவருடைய பொன்மொழிகளை அடிப்படையாகக் கொண்டு தோன்றிய மதமே கிறிஸ்தவமதம் எனப்படும்.

1. அரும் பொருள்.

தூய்மையான - பரிசுத்தமான. கொட்டில் - குடிசை. மகவு, சிசு - குழந்தை. இடையூறு - துன்பம்.

2. கேள்விகள் :-

1. கிறிஸ்தவர்கள் கிறிஸ்து பிறந்த விழாவை எவ்வாறு கொண்டாடுகிறார்கள்?
2. கிறிஸ்து நாதர் எங்கே பிறந்தார்?
3. இயேசுவின் பெற்றோர் ஏன் பாலஸ்தீனத்தை விட்டு வெளியேறினர்?
4. இயேசுநாதர் மக்களுக்கு என்ன போதித்தார்?
5. குருமார் ஏன் இயேசுநாதர் மேல் கோபம் கொண்டனர்?
6. இயேசுநாதரின் மேல் என்ன குற்றம் சாட்டப்பட்டது?
7. இயேசுநாதருக்கு என்ன தண்டனை அளிக்கப்பட்டது?

8. தமது பகைவருக்காக ஆண்டவனிடத்தில் இயேசுநாதர் கோரியது என்ன?

3. பயிற்சி.

1. ஆத்மசக்தி, மூடநம்பிக்கை, சடங்குகள், தெய்வீகம், நற்போதனை — இச் சொற்களை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.
2. மேன்மக்கள், ஆத்மசக்தி, தூய்மை, தன்னலம், அச்சம், விவேகம், பணிவு, அடிக்கடி—இவைகளுக்கு எதிர்ச்சொற்களை எழுது.
3. கீழ் வருவனவற்றிற்கு மாற்று எண் எழுது:— அரசன், பிள்ளை, நாடு, ஆணிகள், பகைவர், மகான், தோற்றம், சாத்திரம்.
4. கிறிஸ்து, கோயிலுக்கு சென்று சாத்திரங்களை பயின்றார். அவர் தமது தெய்வீக சக்தியினால் ஊமைகளை பேசவைத்தார்.

   இவ் வாக்கியங்களில் உள்ள எழுத்துப் பிழைகளைத் திருத்துக.
5. அசோகருடைய வரலாற்றைச் சுருக்கமாக எழுது.

4. இலக்கணம்.

செயப்பாட்டு வினைகளைச் செய்வினைகளாக மாற்றி அமை.

1. இயேசுநாதரால் பல அற்புதங்கள் செய்யப் பட்டன.
2. இயேசுநாதர் குருமாரால் பகைக்கப் பட்டார்.
3. குழந்தை பெற்றோரால் எகிப்துக்கு எடுத்துப் போகப்பட்டது.
4. இயேசுவுக்கு எதிராகக் குருமாரால் சூழ்ச்சி செய்யப்பட்டது.

2. சொல் இலக்கணம் கூறுதல்:

இயேசுநாதர் நல்லுரை கூறினர்.

இயேசுநாதர்: பெயர்ச்சொல், உயர்திணை, ஆண்பால், ஒருமை எண், படர்க்கை இடம், முதல் வேற்றுமை, 'கூறினர்' என்ற பயனிலைக்கு எழுவாய்.

நல்லுரை-பெயர்ச்சொல், அஃறிணை, ஒன்றன்பால், ஒருமை எண், படர்க்கை இடம், இரண்டாம் வேற்றுமை, 'கூறினர்' என்ற பயனிலைக்குச் செயப்படு பொருள்.

கூறினர் - வினைச்சொல், வினைமுற்று, உயர்திணை, ஆண்பால், ஒருமை எண், படர்க்கை இடம், இறந்த காலம், இயேசுநாதர் என்ற எழுவாய்க்குப் பயனிலை.

பெயர்ச்சொற்களுக்குத் திணை, பால், எண், இடம், வேற்றுமை ஆகிய ஐந்தும் உண்டு.

வினைச்சொற்களுக்குத் திணை, பால், எண், இடம், காலம் என்ற ஐந்தும் உண்டு.

பெயர்ச்சொல்லுக்குக் காலம் இல்லை; வினைச்சொல்லுக்கு உருபு இல்லை.

# 19. சீடர்கள் குதிரை முட்டை வாங்கினது

| | | |
|---|---|---|
| குரு | பேதைமை | கண்டேனில்லை |
| கைவிட்டார் | பெருக்கெடுத்தது | ஆறுதல் |
| அடைகாத்தல் | பதைபதைத்து | சவாரி |
| அணைத்து | சூடல்தெறிக்க | |

1. முன்னொரு காலத்தில் பரமார்த்த குரு என்று ஒரு குரு இருந்தார். அவருக்கு மட்டி, மடையன், பேதை, மிலேச்சன், மூடன் என்ற ஐவர் சீடர்களாக இருந்தனர்.

குரு தமக்கு ஏறிச்செல்ல ஒரு குதிரை வேண்டும் என்று அவாக் கொண்டார். குதிரையை விலை கொடுத்து அல்லவா வாங்கவேண்டும்! அதன் விலை எவ்வளவு இருக்கும் என்று விசாரித்தார். ஒரு குதிரையின் விலை நூறு பொற்காசுகளுக்குக் குறையாது எனத் தெரிந்தது. அவரிடம் அவ்வளவு பணமில்லையாதலால், அவ்வெண்ணத்தைக் கைவிட்டார்.



2. ஒருநாள் மடத்திலிருந்த பசு காணமற்போய் விட்டது. மட்டி அதைத் தேடப்புறப்பட்டான். மூன்று நாட்கள் கழித்து மடத்திற்குத் திரும்பி வந்தான். குரு அவனை விசாரித்தார். அவன் "சுவாமி! பசுவைக் காண வில்லை. ஆனால் இருகைகளாலும் கூடத் தழுவமுடியாத குதிரைமுட்டைகளைக் கண்டேன். ஒரு முட்டையின் விலை ஐந்து பொற்காசுகள்தான். குறைந்த விலையில் குதிரையைப் பெறலாம்" என்றான். குரு உடனே மகிழ்ந்து அவனிடம் ஐந்து பொற்காசுகளைக் கொடுத்து, மடையனை அவனுடன் கூட்டி அனுப்பினார்.

3. அவர்கள் சென்ற பிறகு, முட்டை கிடைத்ததும் அதை அடைகாப்பது எப்படி என்றும், யார்அடைகாப்பது என்பது பற்றியும் குரு தமது மூன்று சீடர்களுடன் நெடுநேரம் ஆலோசித்தார். ஒவ்வொரு சீடனும் தனக்கு வேலைமிகுதி என்று சொல்லிவிட்டான். இறுதியில் குரு தாமே அடைகாப்பதாக ஒத்துக்கொண்டார். "முட்டையை மடியில் இருத்திக் கையாலே தழுவிப் போர்வையால் மூடி மார்போடு அணைத்து அன்புடன் பேணி அடைகாப்பேன்" என்று குரு சொன்னார்.

4. இது இவ்வாறிருக்க, மட்டியும் மடையனும் ஒரு ஏரியின் கரைக்குச் சென்றனர். அங்கே அநேக சாம்பற் பூசணிக்காய்கள் காய்த்துக் கிடந்தன. அத் தோட்டம் ஒரு குடியானவனைச் சேர்ந்தது. அவனைச் சீடர்கள் கண்டு, "அப்பா! இந்தக் குதிரைமுட்டைகளில் ஒன்றை எங்களுக்குக் கொடு" எனக் கோரினர்கள்.அவர்களுடைய பேதைமையைக் கண்ட குடியானவன் நகைத்து, "இவை உத்தமசாதிக் குதிரைமுட்டைகள்; இவைவிலையுயர்ந்தவை" என்றான்! அதற்கு மட்டியும் மடையனும், "ஒரு முட்டையின் விலை ஐந்து பொற்காசுகள் என்று நாங்கள் அறிவோம். இந்தா ஐந்து பொற்காசுகள். எங்களுக்கு ஒரு நல்ல முட்டைகொடு" என்றார்கள்! குடியானவன், "ஐயா! நீங்கள் நற்குணம் படைத்தவர்கள் போல் காண்கிறது.உங்களுக்குப் பிரியமான முட்டையை எடுத்துக்கொண்டு செல்லுங்கள். ஆனல் இதன் விலையை ஒருவரிடமும் சொல்லவேண்டாம்" என்றான்.

5. மட்டியும் மடையனும் மிகப் பெரியதொரு காயை எடுத்துக்கொண்டு சென்றனர் ; நெடுந்தூரம் நடந்து செல்லும் பொழுது நடுவழியில் ஒரு மரக்கிளை பட்டுப் பூணிசக்காய் கீழே விழுந்து உடைந்துபோயிற்று.

அப்பொழுது அருகிலிருந்த புதரில் பதுங்கியிருந்த ஒரு முயல் பயந்து ஓடத்தொடங்கிற்று. மட்டியும் மடையனும், ஓடும் முயல் முட்டையினின்றும் வெளிவந்த குதிரைக்குட்டி என்றுநினைத்து, "முட்டையிலிருந்து குதிரை ஓடுகிறது" என்று கூச்சலிட்டுக்கொண்டு அதைப்பிடிக்க விரைந்தார்கள்! மேடும் பள்ளமும், காடும் மலையும் பாராமல் ஓடவே, அவர்களுடைய ஆடைகள் முட்செடிகளில் மாட்டிக்கொண்டு கிழிந்தன; உடலில் வியர்வை பெருக்கெடுத்தது; நெஞ்சம் பதைபதைத்தது; குடல் தெறிக்க ஓடியும் முயல் பிடிபடாமல் மறைந்து போயிற்று. இருவரும், இளைப்பாறுமல் நொண்டி நொண்டி நடந்து, பசியும் பட்டினியுங்கிடந்து, பொழுது சாய்ந்தபின் மடத்திற்குச் சென்றனர்.

6. மடத்து வாயிலில் இருவரும் "ஐயோ! அப்பா!" என்று அலறிக்கொண்டு கீழே விழுந்தார்கள். மற்றச் சீடர்கள் வந்து அவர்களை எடுத்து நிறுத்தி நடந்தசெய்திகளை விசாரித்தார்கள். மட்டி, "ஐயா! நான் பிறந்தது முதல் அதுபோன்ற வேகமான குதிரையைக் கண்டேனில்லை. அதன் நிறம் கருப்புப் பாய்ந்த சாம்பல்; முட்டையில் கிடந்த குட்டியானுலும் இரு செவிகளையும் விறைத்துக்கொண்டு இருவிரல்களின் நீளத்திற்கு வாலையும் தூக்கிக்கொண்டு, நெஞ்சு நிலத்தில் படும்படி நான்கு கால்களையும் விரித்து நீட்டி ஓடின வேகத்தை என்னுல் சொல்லவும் கருதவும் முடியவில்லை" என்று விவரித்தான்!

7. அவ் வரலாற்றினைக்கேட்ட குருவும் சீடர்களும் மிக்க வருத்தம் அடைந்தார்கள். குரு அவர்களுக்கு ஆறுதல் கூறினுர். "ஐந்து பொற்காசுகள் போனது உண்மை. ஆனுல் அதற்காகத் துயரப் படவேண்டியதில்லை. குதிரைக்குட்டி ஓடிப்போனதில் நாம் மகிழ்ச்சி அடைய

வேண்டும். குட்டியாக இருக்கும் பொழுதே இப்படி இருந்தால், வளர்ந்த பின் அதன்மேல் சவாரி செய்ய முடியுமா? நானோ கிழவன்; என்றால் அதில் ஏறிச் செல்ல முடியாது. அம்மாதிரிக் குதிரையைச் சும்மா கொடுத்தாலும் எனக்கு வேண்டாம்" என்று கூறினர்!

1. அரும்பொருள் :-

அடைகாத்தல் - அணைத்துக் கொண்டு காப்பாற்றுதல். பேதைமை - மூடத்தனம். குடல்தெறிக்க - குடல் வெளியே வர.

2. கேள்விகள் :-

1. குருவுக்கு என்ன அவா உண்டாயிற்று?
2. கன்றைத் தேடச்சென்ற மட்டி, குருவினிடம் திரும்பி வந்து என்ன சொன்னன்?
3. குரு முட்டையை எவ்வாறு அடைகாப்பதாகச் சொன்னர்?
4. மட்டியும் மடையனும் குதிரை முட்டை என்று எதை வாங்கினர்கள்?
5. குதிரை முட்டைக்கு என்ன நேர்ந்தது?
6. குதிரைக் குட்டி என்று எதைச் சீடர்கள் நினைத்தனர்?
7. மட்டி குதிரைக் குட்டியை எவ்வாறு விவரித்தான்?
8. இறுதியில் குரு கூறியது என்ன?

3. பயிற்சி.

1. எதிர்ச்சொற்களை எழுது - மேடு, மலை, கண்டேனில்லை, கிழவன், வேண்டாம், மடையன்.

2. கைவிட்டார், பதைபதைத்து, பெருக்கெடுத்தது, மார்போடணைத்து- இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

3. கீழே உள்ள வாக்கியங்களில் காணப்படும் தடித்த சொற்களுக்குச் சொல் இலக்கணம் கூறு.

   1. குரு குதிரையை விரும்பினர்.
   2. குருவுக்கு ஐந்து சீடர்கள் இருந்தனர்.
   3. மட்டி குடியானவனைக் கண்டு குதிரை கேட்டான்.
   4. புதரிலிருந்த முயற்குட்டி பயந்து ஓடிற்று.

4. இலக்கணம்.

ஒருவர் பேசுவதைப் பேசியவாறே மேற்கோள் குறிகளை இட்டு எழுதுகிறோம். இக்குறிகளை நீக்கியும் எழுதலாம். (உ-ம்) குரு சீடர்களைப் பார்த்து, "எனக்கு ஒரு குதிரை வேண்டும்" என்றார். குரு சீடர்களைப் பார்த்துத் தனக்கு ஒரு குதிரை வேண்டும் என்று சொன்னார்.

பின் வருவனவற்றில் மேற்கோள் குறிகளை நீக்கி எழுது.

1. மட்டி குடியானவனிடம், "ஐயா! எனக்கு ஒரு குதிரை முட்டை கொடு" என்று கேட்டான்.
2. "இவை உத்தம சாதிக் குதிரை முட்டைகள்; இவை விலையுயர்ந்தவை" என்று குடியானவன் பதில் சொன்னன்.
3. மட்டி குருவை நோக்கி, "சுவாமி! அது போன்ற குதிரையை நான் இதுவரையில் பார்த்ததேயில்லை" என்றான்.

# 20. விஞ்ஞான விந்தைகள்



| | | |
|---|---|---|
| விஞ்ஞானம் | மனோவேகம் | களியாட்டம் |
| விந்தை | திண்ணம் | அணுக்குண்டு |
| வாயுவேகம் | வாயிலாக | பிரதிபலன் |
| இரஸாயனம் | இலட்சியம் | |
| விடாமுயற்சி | அரிது | |

1. சில நூற்றுண்டுகளுக்கு முன்னுல் இவ்வுலகில் வாழ்ந்திருந்த ஒருவர், இப்பொழுது மீண்டும் வந்து இவ்வுலகில் சுற்றுப்பிரயாணம் செய்தாரே யானுல், வாழ்க்கை முழுவதும் வேறுபட்டிருப்பதை அவர் காண்பார். அந்நாட்களில் மாட்டு வண்டிகளும் குதிரை வண்டிகளும் இருந்தன; மக்கள் பல தொழில்களையும் தமது சரீர உழைப்பினுலேயே செய்து வந்தனர். இப்பொழுதோ எங்கும் இயந்திரமயம்: எங்கும் வாயுவேகமாகச் செல்லும் மோட்டார் வண்டிகள், மனோவேகத்

தில் பறக்கும் ஆகாய விமானங்கள், நொடிப்பொழுதில் நெடுந்தூரம் செல்லும் மின்சார வண்டிகள், பிரயாணி கள் பலர் சேர்ந்து செல்லும் இரயில் வண்டித் தொடர் கள், மோட்டார் பஸ்கள், கண்களைப் பறிக்கும் ஒளி யுள்ள மின்சார விளக்குகள், விரைவில் செய்திகளை அனுப்பும் கம்பியில்லாத் தந்திகள், பிற விடங்களில் பேசுவதைக் கேட்கும் வானொலிக்கருவிகள், சினிமாக் காட்சிகள் ஆகிய பலவற்றை அவர் கண்டு திகைத்து நிற்பார் என்பது திண்ணம்.

2. இது வரையில் மனிதன் தரையின் மேலும் தண்ணீரின் மேலும் பிரயாணம் செய்து வந்தான். இப் பொழுது ஆகாய மார்க்கத்திலும் பறந்து செல்கிறான். பறவைகளைப் போலத்தானும் ஆகாய வெளியில் பறந்து செல்ல வேண்டுமென்று மனிதன் அவாக்கொண்டான். இதற்கெனப் பலர் ஆராய்ச்சி செய்து உயிரிழந்தனர். ஆனால் மனிதன் தன் உழைப்பை விடவில்லை. இறுதி யில் ஆகாயவிமானம் கண்டுபிடிக்கப் பட்டது. ரைட் சகோதரர்கள் இப்புதுமையைக் கண்டுபிடித்து உலகோ ருக்கு வழங்கினார்கள். குபேரனிடத்தில் ஒரு புஷ்பக விமானம் இருந்ததாக நாம் புராணங்களில் படித்திருக்கி றோம்; ஆனால் அதைப் பார்த்ததில்லை. இப்பொழுது நமது கண் முன்னால் வெகு விரைவில் மக்களை நெடுந் தூரம் ஏற்றிச் செல்லக்கூடிய ஆகாய விமானங்களைப் பார்க்கிறோம். விஞ்ஞான அறிவின் பயனாகவே இப் புதுமை கண்டுபிடிக்கப்பட்டது.

3. இது மட்டும் அல்ல. கம்பியில்லாத் தந்தி மற்றொரு புதுமை. இது கண்டுபிடிக்கப்படும் வரை மின்சார சக்தியின் உதவியால் கம்பிகளின் மூலமாகச்செய் திகள் அனுப்பப்பட்டு வந்தன. உள்நாட்டில் கம்பிகளின்

மூலமாகச் செய்திகள் அனுப்ப இயலும். கடல்களில் கம்பிகளை அமைத்துத் தந்தி மூலம் செய்திகளை அனுப்புவது கஷ்டமாக இருந்தது. ஆனால் கம்பி இல்லாமலேயே செய்திகளை அனுப்ப முடியும் என்பதை **மார்க்கோனி** என்பவர் கண்டுபிடித்தார். இப்பொழுது பல நாடுகளுக்கு இடையே கம்பியில்லாத் தந்தியின் மூலம் செய்திகள் அனுப்பப்படுகின்றன. கப்பல்களில் பிரயாணம் செய்யும்போதும், ஆகாய விமானத்தில் பிரயாணம் செய்யும்போதும், ஆபத்துக்கள் நேரிடும் காலத்தில், கம்பியில்லாத் தந்தியின் வாயிலாக எளிதில் செய்திகளை அனுப்பித் தேவையான உதவியைப் பெறக் கூடும்.

4 விஞ்ஞானப் புதுமைகளில் **வானொலியே** சிறந்தது. இந்நாள் வரை நாடகங்களையும் சங்கீத நிகழ்ச்சி



களையும் காண நேரில் சென்றுதான் பார்க்கவேண்டும். இப்பொழுதோ வீட்டில் இருந்தவாறே இக்களியாட்டங்களைக் கேட்டு மகிழலாம். நமது கவிச்சக்கரவர்த்தி பாரதியார், "காசிநகர்ப் புலவர் பேசும் உரைதான் காஞ்சியிற் கேட்பதற்கோர் கருவி செய்வோம்" என்று பாடினார். புலவர் வாக்குப் பொய்க்க வில்லை. இன்று பல நாடுகளில் நிகழும் நாடகங்களையும், சங்கீத நிகழ்ச்சிகளையும், செய்திகளையும், சொற்பொழிவுகளையும் ரேடியோ என்ற **வானொலிக்** கருவியை அமைத்துக் கேட்கலாம்.

5. இப்பொழுது நாடெங்கும் சினிமாப்படங்கள் பெருகியுள்ளன. இயந்திரங்களைக் கொண்டு இவை தயாரிக்கப்படுகின்றன. இவற்றின் வாயிலாக மக்கள் பல நாடுகளில் நடைபெறும் சம்பவங்களையும் காட்சிகளை



யும் திரையில் நேரில் கண்டு களிக்கலாம். நாடக பாத்திரங்கள் நமக்கு முன்னாலேயே நடிப்பதுபோல் திரையில் தோன்றும். மக்களை நல்வழியில் நடத்தவும், அவர்களுக்கு நன்மை பயக்கும் வழியில் ஓய்வுநேரப் பொழுது போக்காகவும் இவை பயன்படுகின்றன. முதலில் நடிப்புமட்டும் திரையில் காட்டப்பட்டு வந்தது. இப்பொழுது பேச்சும் நடிப்பும் கலந்தே காட்டப் படுகின்றன.

6. சமீபகாலத்தில் நடந்து முடிவுற்ற இரண்டாவது உலகப் போரின் பலனாக அணுக்குண்டு என்ற கருவி ஆக்கப்பட்டுள்ளது. இதை, ஒருநாட்டின்மேல் விமானத்தினின்று வீசி எறிந்தால், நெடுந்தூரத்திற்கு மக்கள் வாழ்க்கை நாசம் அடையும். உலகப்போரில் அணுக்குண்டை ஜப்பான் நாட்டில் வீசியதன் விளைவாகத்

தான் ஜப்பானியர் தோல்வி அடைந்தனர். அணுக் குண்டு விஞ்ஞானப் புதுமையின் கோர உருவம். இச் சக்தியை மனிதவாழ்க்கைக்குப் பயன்படும் வண்ணம் பிரயோகிக்கக் கூடும்; பெருங்காடுகளை அழிக்கவும், மலைகளைப் பிளந்து பாதைகள் அமைக்கவும், அணுச் சக்தி பயன்படக்கூடும் என்று சொல்லப் படுகிறது.

7. நமது நாட்டிலும் விஞ்ஞானிகள் இத்துறையில் பெரும் புகழ் எய்தி இருக்கின்றனர். ஸர். ஜே. ஸி. போஸ் என்ற பெரியார் தாவர ஆராய்ச்சியில் ஈடுபட்டுப் புகழ் பெற்றார்; ஸர். பி. ஸி. ரே என்ற பெரியார் இரசாயனத் துறையில் ஆராய்ச்சிகள் செய்துள்ளார்; ஸர். ஸி.வி. இராமன் என்பார் ஒலி, ஒளி ஆகியவற்றின் தன்மைகளை ஆராய்ந்து பல விந்தைகளைக் கண்டுள்ளார்.

8. விஞ்ஞான விந்தைகளைக் கண்டுபிடிக்கக் காரணமாயிருந்த பெரியார் பலர் தமது நலனைச் சிறிதும் கருதாமல், தமது உயிரையும் பொருட்படுத்தாமல்,விடா முயற்சியுடன் ஆராய்ச்சிகளைச் செய்து முடிவுகளைக் கண்டனர். அவ்விந்தைகளை மக்களின் நன்மைக்காகப் பயன்படுத்துவதே நாம் அவர்களுக்குச் செய்யும் பிரதிபலன் ஆகும். அவ்வாறின்றி, அவற்றைக் கொண்டு மக்களினத்தையே அழிப்பது விசனிக்கத்தக்க செயல் ஆகும். கடவுளுடைய படைப்பில் உயர்ந்தவன் மனிதன். ‘அரிது, அரிது, மானிடராதலரிது’ என்றார் ஒளவையார். அத்தகைய உயர்நிலை பெற்ற மனிதன், தன்னைப்போன்ற மக்களை உயிர்வதை செய்து தன் பெருமையை நிலைநாட்ட நினைப்பது விவேகமற்ற செய்கையாகும். மனிதர் யாவரும் ஒரு குடும்பம்; விஞ்ஞான விந்தைகள் நம்மை நெருக்கமாகப் பிணைத்து விட்டன. நாம் எல்லோரும் சகோதரர் என்று உணர்ந்து

அமைதியாக வாழ்வதே நமது வாழ்க்கையின் இலட்சிய மாக இருக்க வேண்டும்.

1. அரும் பொருள் :-
விஞ்ஞானம் - அறிவியல்கலை. திண்ணம் - நிச்சயம். வாயிலாக - மூலமாக. பிரதிபலன் - கைம்மாறு. அரிது- கஷ்டம்.

2. கேள்விகள் ;-
1. பண்டைக்கால மனிதர் இன்று உலகில் வந்தால் ஏன் திகைப்பார்?
2. ஆகாயவிமானத்தைக் கண்டு பிடித்தவர் யார்?
3. கம்பியில்லாத்தந்தி யாரால் கண்டுபிடிக்கப்பட்டது?
4. கம்பியில்லாத்தந்தியால் என்ன உபயோகம்?
5. வானொலிக் கருவியினால் யாது பயன்?
6. அணுச் சக்தியை எவ்வாறு பயன் படுத்தலாம்?
7. நம் நாட்டில் புகழ் பெற்ற விஞ்ஞானிகள் யாவர்?
8. விஞ்ஞான விந்தைகளை எவ்வாறு பயன் படுத்த வேண்டும்?

3. பயிற்சி :-
1. கீழுள்ளவற்றைப் பொருத்தமாக சேர்த்து எழுது.

| | |
|---|---|
| ஆகாய விமானத்தால் | செய்திகளை விரைவில் அனுப்பலாம். |
| கம்பியில்லாத் தந்தியினால் | ஆகாயத்தில் பறந்து செல்லலாம். |
| சினிமாப் படங்களால் | மேடு பள்ளங்களைச் சமன் செய்யலாம். |
| வானொலிக் கருவியால் | பலகாட்சிகளைத் திரையில் காணலாம். |
| அணுச் சக்தியினால் | வெளியிடங்களில் நடைபெறும் நிகழ்ச்சிகளைக் கேட்கலாம். |

2. இலட்சியம், பிரதிபலன், அரிது, விந்தை, திண்ணம் - இச் சொற்களை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

3. புஷ்பம், நிஜம், ஜலம், போஜனம், இராஜா, சகோதரன், மாதா—இவ் வடசொற்களுக்குச் சரியான தமிழ்ச் சொற்களை எழுது.

4. இலக்கணம்.

1. இரட்டைச் சொல் - அடுக்குத் தொடர்.
கத்தி பளபள வென்று மின்னுகிறது. இதில் உள்ள பளபள என்பது இரட்டைச் சொல். இச்சொல்லைப் பிரிக்க முடியாது; பிரித்தால் பொருள் விளங்காது.
தம்பி தாதா என்று கேட்டான். இதில் தாதா என்பது அடுக்குத் தொடர். இதைப் பிரித்துப் பொருள் கூறலாம்.

2. இதுவரை நீ கற்ற இரட்டைச் சொற்களையும், அடுக்குத் தொடர்களையும் எடுத்து எழுது.

# 21. வாழ்க நீ! எம்மான்



| | | | |
|---|---|---|---|
| எம்மான் | ஆர்ந்து | படி | முதன்மை |
| விடுதலை | குடிமை | கீர்த்தி | |
| மகாத்மா | ஞானம் | உற்ருய் | |

1. வாழ்க நீ! எம்மான், இந்த
வையத்து நாட்டி லெல்லாம்

தாழ்வுற்று வறுமை மிஞ்சி
விடுதலை தவறிக் கெட்டுப்

பாழ் பட்டு நின்ற தாமோர்
பாரத தேசந் தன்னை

வாழ்விக்க வந்த காந்தி
மகாத்மா ! நீ வாழ்க! வாழ்க!

2. அடிமை வாழ் வகன்றிந் நாட்டார்
விடுதலை யார்ந்து, செல்வம்,
குடிமையி லுயர்வு, கல்வி,
ஞானமும் கூடியோங்கிப்
படிமிசைத் தலைமை யெய்தும்
படிக்கொரு சூழ்ச்சி செய்தாய்!
முடிவிலாக் கீர்த்தி பெற்றாய்!
புவிக்குளே முதன்மை யுற்றாய்!

—சுப்பிரமணிய பாரதியார்

**1.** அரும்பொருள் :-
எம்மான் - எம்பெரியோய். ஆர்ந்து - அடைந்து. குடிமை - குடிமக்கள் வாழும் முறை. ஞானம்-உண்மை அறிவு. படி - பூமி. உற்றாய் - அடைந்தாய்.

**2.** கேள்விகள் :-
1. நமது நாட்டின் நிலைமை எவ்வாறு இருந்தது ?
2. காந்தி அடிகள் நாட்டிற்குச் செய்த பணி என்ன?

**3.** பயிற்சி.
1. நமது நாட்டின் விடுதலைக்கு உழைத்த தலைவர்களின் பெயர்களை எழுது.
2. காந்தி அடிகளின் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாக எழுது.
3. திருத்தி எழுது.
நமது ஞடு மற்ரெல்லா நாடுகளிலும் தாழ்வுற்று, வருமை மிஞ்சி, விடுதளையை இளந்து, கஷ்டப் பட்டுக்கொண்டு இறுந்தது. கான்தி அடிகல் நாம் விடுதளை பெர அறும் பாடுபட்டார். அவர் ஞாடு மூலுதும் பிறயானம் செய்தார் : மக்கள் உல்லத்தைத் தட்டி எலுப்பினார்.

## 22. நமது கொடி

| | | |
|---|---|---|
| சின்னம் | உணர்த்தும் | ஆற்றல் |
| வர்ணம் | சாந்தி | நெறி |
| சந்ததம் | விண்மீன் | இணைத்து |
| பொறிக்கப்பட்டு | பிறைச்சந்திரன் | சுதந்தரம் |
| இழுக்கு | சந்தர்ப்பம் | ஜெய்ஹிந்த் |
| வந்தேமாதரம் | அறம் | இணையிலா |
| தியாகம் | | |

1. உலகிலுள்ள சுதந்தர நாடுகள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு கொடி உண்டு. அந்தந்த நாட்டினரின் உயர்ந்த நோக்கங்களையும் சிறந்த பண்புகளையும் அக்கொடிகள் எடுத்துக் காட்டும். நமது சுதந்தர பாரத நாட்டிற்கும் ஒரு கொடி இருக்கிறது. அக் கொடியை நமது உயர்ந்த நோக்கங்களின் சின்னமாகப் போற்றி வருகிறோம்.

2. நமது நாடு சுதந்தரம் பெற்று நான்காண்டுகளே ஆயின. அந்நன்னாள் 1947-ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 14-ம் நாள் நள்ளிரவு ஆகும். அன்றிலிருந்து நமக்கென ஒரு தனிக்கொடியை நாம் ஏற்படுத்திக் கொண்டோம். அதற்கு முன் அந்நிய அரசியலார் நமக்கெனத் தனிக்கொடி அளிக்கவில்லை. ஆயினும் 1906–ஆம் ஆண்டில் இந்திய நாட்டின் விடுதலைக்கு அரும்பாடுபட்ட காமா என்னும் அம்மையார் நமது நாட்டிற்கென ஒரு தனிக்கொடியை உண்டாக்கினார். அதன் மேற்பகுதியில் எட்டு விண்மீன்கள் இருந்தன; அப்பகுதி காவி நிறம். இடைப்பகுதி வெண்ணிறம்; அதில் ‘வந்தே மாதரம்’ என்ற சொற்றொடர் இந்தி மொழியில் பொறிக்கப்பட்டிருந்தது. கீழ்ப் பகுதி பச்சை நிறம்;

அப்பகுதியில் இடப்புறம் சூரியனும் வலப்புறம் பிறைச் சந்திரனும் இருந்தன. 'வந்தே மாதரம்' என்றால் 'தாயே! வணக்கம்' எனப் பொருள்படும்.

3. நமது நாட்டிற்குப் பல நன்மைகளைச் செய்த பெஸன்ட் அம்மையார் 1916 ஆம் ஆண்டில் ஒரு கொடியைத் தோற்றுவித்தார். அதில் பச்சை, சிவப்பு நிறப் பட்டைகளில் இடப்பக்கம் மேல் மூலையில் 'யூனியன் ஜாக்' கும், கீழே விண்மீன்களும் இருந்தன. 'யூனியன் ஜாக்' என்பது ஆங்கிலேயரின் கொடி.

4. காந்தியடிகள் காங்கிரஸ் இயக்கத்திற்குத் தலைமை வகித்ததும், 1921-ஆம் ஆண்டில், ஒரு கொடியை உண்டாக்கினர். அதில் மேல் பட்டை வெண்மை நிறம்; நடுப்பட்டை பச்சை; கீழ்ப்பட்டை காவி நிறம் இம் மூன்று பட்டைகளையும் தொட்டுக் கொண்டு ஒரு இராட்டினம் அதில் பொறிக்கப்பட்டிருந்தது. 1931-இல் பட்டைகளின் நிறங்கள் மாற்றப்பட்டன; நடுப்பட்டை வெண்மையாகவும், கீழ்ப்பட்டை பச்சையாகவும் மாற்றப்பட்டன; நடுவில் வெண்பட்டையில் இராட்டினம் இருந்தது.

5. நாம் 1947-இல் சுதந்தரம் பெற்றபின் அக்கொடியில் மீண்டும் மாறுதல் செய்யப்பட்டது; நடுவில் இருந்த இராட்டினம் நீக்கப்பட்டு, அதே இடத்தில் அசோகச் சக்கரம் பொறிக்கப்பட்டது. நமது நாட்டுக் கொடியில் உள்ள மூன்று நிறங்களும் சக்கரமும் எவற்றைக் குறிக்கின்றன? காவி நிறம் ஆண்மையையும் தியாகத்தையும் உணர்த்தும்; வெண்மை நிறம் உண்மையையும் அமைதியையும் குறிக்கும்; பசுமை நிறம் அன்பையும் ஆற்றலையும் அறிவிக்கும். இடையில் உள்ள அசோகச் சக்கரம், அசோகன் காட்டிய தரும மார்க்கத்தையும், காந்தியடிகளின் சத்தியநெறியையும் இணைத்துக்

காட்டும் குறியாகும். மேலும் சக்கரம் சுழலும் இயல்பு உடையது; ஆதலால் அது சுழலும் தன்மையுள்ள நமது வாழ்க்கையையும், ஊக்கமான உழைப்பையும் குறிக்கும்.

6. நமது நாட்டுக் கொடியை நாம் என்றும் போற்றிப் பெருமைப்படுத்தி வரவேண்டும். அதுவே நமது தேசியக்கொடி. விழாக் காலங்களில் கொடிவணக்கம் செய்யவேண்டும். உயரமானதொரு கம்பத்தின் உச்சியில் அக் கொடியைப் பறக்கவிடவேண்டும். அதுவே நமது அரசாங்கத்தின் சின்னம்; அதற்கு எக்காலத்திலும் இழுக்கு உண்டாகும்படி நடந்து கொள்ளமாட்டோம் என்று நாம் வாக்குறுதி கொடுக்கவேண்டும்.

7. தேசியக்கொடியை எப்பொழுதும் பறக்கவிடக் கூடாது; சில சந்தர்ப்பங்களில் மட்டும் பறக்கவிடலாம். கொடியை விரைவாக ஏற்றி, மெதுவாக இறக்கவேண்டும். தேசிய விடுமுறை நாட்களிலும், அரசியலில் விசேஷமான நாட்களிலும்தான் கொடியைப் பறக்கவிடலாம். சூரிய உதயம் முதல் சூரியன் அஸ்தமிக்கும் வரையில் மட்டும், கொடியைப் பறக்கவிடலாம். கொடி பறக்கும் போது சிவப்பு நிறப்பட்டை மேலும், பசுமை நிறப்பட்டை கீழுமாக இருக்கவேண்டும்.

8. துயர்ம் மிக்க நாட்களில், கொடிமரத்தின் பாதியில் கொடியைப் பறக்கவிடவேண்டும்; ஆனால் முதலில் கொடியை உச்சி வரையில் ஏற்றியே பிறகு பாதியளவில் நிறுத்தவேண்டும். கொடியை இறக்கும்பொழுதும், உச்சிக்கு ஏற்றிய பிறகே, கீழே இறக்க வேண்டும். வேறு எக்கொடியையும் தேசியக்கொடிக்கு மேலேயும், வலப்புறத்திலும் பறக்கவிடக் கூடாது. கொடி தரையில் இழுபடச் செய்யக் கூடாது. பக்கவாட்டில் கொடியைப் பிடிக்கக் கூடாது. இவ்வாறு செய்தல் கொடியை

அவமதிப்பதாகும்; நாட்டுப்பற்று குறைந்தவர் எனக் கருதப்படுவோம். நமது கொடிக்குப் பெருமை செய்தால், நமது நாட்டிற்குப் பெருமை செய்தவர்களாவோம்; நம் நாடு சுதந்தரம் அடைவதற்கு உழைத்த பெருமக்களைப் பெருமை செய்தவர்கள் ஆவோம்.

"இந்திய மகனே! இந்த
இணையிலாக் கொடியைக் காத்தல்
முந்தியுன் முன்னோர் தந்த
அறமெலாம் முடிப்ப தாகும்;
எந்த ஓர் நாட்டிற் கேனும்
எதிரியாய் எடுத்த தல்ல;
சந்ததம் உலகுக் கெல்லாம்
சாந்தியைத் தரவே யாகும்."

—நாமக்கல் கவிஞர்

வாழ்க நம் கொடி! வாழ்க பாரத நாடு! ஜெய் ஹிந்த்!

1. அரும்பொருள் :-

சின்னம் - அடையாளம். பொறிக்க - தீட்ட. தியாகம் - தன்னலமில்லாத பணி. உணர்த்தும் - தெரிவிக்கும். ஆற்றல் - திறமை. நெறி - மார்க்கம். இழுக்கு - குற்றம், அவமதிப்பு. இணையிலா - சமானமில்லாத. சந்ததம் - எப்பொழுதும். விண்மீன் - நட்சத்திரம்.

2. கேள்விகள் :-

1. கொடி உள்ள நாடுகள் எத்தகையன?
2. நமது கொடியில் மாறுதல்கள் எவ்வெப்பொழுது செய்யப்பட்டன?
3. நமது கொடியின் நிறங்களும் சக்கரமும் எவற்றைக் குறிக்கின்றன?
4. நமது கொடியை எப்படிப் பறக்க விடவேண்டும்?
5. எவ்வெப்பொழுது கொடியை அவமதிப்பதாகக் கருதப்படும்?

3. பயிற்சி.

1. இழுக்கு, இணையிலா, தியாகம், சந்ததம், விண்மீன் - இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

2. சொற்களைப் பிரித்து எழுது: நாட்டுப்பற்று, வெண்ணிறம், ஒவ்வொன்று, பிறைச்சந்திரன், வெண்பட்டை, தருமமார்க்கம்.

3. 'கொடியேற்றுவிழா' என்ற சொற்றொடரையும் 'நட' என்ற வினைச்சொல்லையும் சேர்த்து மூன்று காலங்களையும் குறிப்பிடும் வாக்கியங்களை அமைத்து எழுது.

## 23. சாணக்கியன்

| | | |
|---|---|---|
| அரண்மனை | பகற்கனவு | மிளிர்கின்றன |
| தர்பார் | அண்மை | நற்றுணைவர் |
| புல்லுருவி | செருக்கு | அதிதி |
| ஆசனம் | அகம்பாவம் | திலகம் |
| பேதம் | சிகை | சாகஸம் |
| எள்ளல் | மறையவர் | நிர்மூலம் |
| சாம்ராச்சியம் | மகுடாபிஷேகம் | முக்காலும் |

காட்சி 1

இடம் – பாடலீபுரத்து அரண்மனையில் தர்பார் மண்டபம்.

காலம் – காலை.

பாத்திரங்கள்: நவநந்தர், முதலமைச்சன் இராட்சதன், ஏனைய மந்திரிப் பிரதானிகள். அரியணையில் நவநந்தரில் முதல்வன் அமர்ந்திருக்கிறான்.

**நந்தன்** – ஆகா! (சிரிக்கிருன்) நாம் வென்ருேம்! மௌரிய குலத்தைப் பூண்டுடன் களைந்து விட்டோம். நந்தமரபினர்க்கே பாடலீபுரம் உரியது. நேற்று புல்லுருவிபோல் முளைத்த மௌரிய குலத்தை வேருடன் களைந்தோம்!



**இராட்சதன்** – இல்லை! இல்லை! மௌரியகுலம் இன்னும் அழியவில்லை.

**நந்தன்** – அஃதெவ்வாறு?

**இராட்சதன்** – சந்திரகுப்தன் வாழும் வரையில் மௌரிய குலத்திற்கு அழிவு ஏது.?

**நந்தன்** – என் பகைவனுல் நேர்ந்த பயத்தைச் சந்திரகுப்தன் நீக்கினுன். ஆதலால் அவனைச் சிறையினின்றும் விடுவித்தேன். அவனுல் தன்னந்தனியாக யாது செய்ய இயலும்?

**இராட்சதன்** – சந்திரகுப்தன் இப்பொழுது அன்னசத்திரத்தின் நிர்வாகி என்பது உண்மை. ஆனுல் சமயம்

வந்தால் அவன் அரசினுக்கும் அதிகாரி ஆவான்! நாம் ஏமாந்து போகக்கூடாது.

**நந்தன்** - நன்று! நன்று! எம்மை எதிர்த்து அரசினைப் பெற அவனால் இயலுமா? இது பகற்கனவேயாம்.

(தர்பார் கலைகிறது; யாவரும் செல்லுகிறார்கள்)

காட்சி 2

**இடம்** - பாடலீபுரத்துக் கருகில் ஒரு பரந்தவெளி.

**காலம்** - நண்பகல்.

**பாத்திரங்கள்** - சாணக்கியன், சந்திரகுப்தன்.

(காஞ்சி நகர் வாசியான சாணக்கியன் என்னும் அந்தணன் மிகச் சோர்வுடன் பசியால் துன்புற்று, நண்பகலில் பாடலீபுரத்துக்கு அண்மையில்இருந்த ஒரு பரந்த வெளியில் நடைப்பாதையில் விரைந்து வருகிறான். நடையில் செருக்கும் ஆண்மையும் மிளிர்கின்றன. வழியிலிருந்த சிறு பூண்டு ஒன்று அவன் காலில் இடற, அதனால் நடை தவறி, நிலை தடுமாறுகிறான்.)

**சாணக்கியன்** - ஆ! இச்சிறு பூண்டிற்கா இத்துணைச் செருக்கு! என் வருகையைச் சிறிதும் மதியாது, நடுவழியில் நின்று, என்நடையைத் தளர்ச்சியடையச் செய்து விட்டதே! அற்பப்புல்லே! நன்று, நன்று! அறிவிலும் ஆற்றலிலும் சிறந்த சாணக்கியன் நான் என்று நீ அறியாய் போலும்! பாவம், நீ என் செய்வாய்? உன் வாழ்நாள் குறுகி விட்டது!

(பூண்டை வேருடன் பிடுங்கித் தண்ணீரில் கரைத்துக் குடிக்கிறான். இச்செய்கையைச் சிறிது தொலைவிலிருந்து சந்திரகுப்தன் கவனிக்கிறான்.)

**சந்திரகுப்தன்** - (தனக்குள்) ஆச்சரியம்! இவ் வந்தணர் ஒரு அற்பப் பூண் டினிடம் இவ்வளவு சினம்கொண்டால், இவருக்குத் தீங்கிழைப்பவரிடம் இவர் கொள்ளும் கோபம் எவ்வளவு கொடியதாக இருக்கும்? நமது நோக்கம் ஈடேற இவரே நற்றுணைவர். (வெளிவந்து வணங்கி) ஐயனே! வரவேண்டும், வரவேண்டும்.

**சாணக்கியன்** - நீ யார்? எங்கு அழைக்கிறாய்?

**சந்திரகுப்தன்** - அந்தணரே! தாங்கள் பசியால் வாடுகிறீர்கள். அன்ன சத்திரத்தில் அமுதுண்டுபோக வேண்டுகிறேன். நான் அங்கே அதிதிகளை வரவேற்கும் அதிகாரி.

**சாணக்கியன்** - மெத்த சந்தோஷம்! செல்வோம் வா. (போகிறார்கள்.)

காட்சி 3

**இடம்** - அன்னசத்திரம். **காலம்** - நண்பகல். **பாத்திரங்கள்**- சந்திரகுப்தன், நவநந்தர், சாணக்கியன்.

(சத்திரத்தை யடைந்த சாணக்கியன் உட்சென்று பார்க்கிறான். உணவுச் சாலையில் முதல் வரிசையில் பொன் ஆசனங்களுக்கு எதிரில் ஒன்பது தங்கத் தட்டுகளும் தங்கக்கிண்ணங்களும் இருக்கின்றன. முதல் ஆசனத்தில் சாணக்கியன் அமர்கிறான். அச்சமயம் நவநந்தர் அங்கு வருகிறார்கள்; இராட்சதனும் வருகிறான்.)

**நந்தன்** - (முதல் ஆசனத்தில் இருந்த சாணக்கியனை நோக்கி) யாரப்பா நீ?

**மற்றொருவன்** - இவன் யார்? பித்தனைப் போலுள்ளான். தண்டச் சோற்றுக்காரனுக்குத் தங்க ஆசனமா?

பின்னும் ஒருவன் - பித்தனே! உடனே எழுந்து செல்.



சாணக்கியன் - ஏனப்பா? நீங்கள் யார்? இது அன்ன சத்திரம் அல்லவா? இதில் மேலோர் கீழோர்என்ற பேதம் ஏன்? ஏன் பொறுமையை இழக்கிறீர்கள்? என் அருகில் அமருங்கள்.

நந்தன் - அற்ப! பிதற்றுதே! உனக்கு இவ்வாசனம் ஏன்? உன்னருகில் நான் அமருவதா? நன்று! நன்று!

சாணக்கியன் - மதியீனர்களே! உருவத்தைக் கண்டு எள்ளலாகாது. அகம்பாவத்தால் அழியாதீர். யான் இடம் பெயரேன்.

நந்தன் - யாரடா சேவகா! இவனை வெளியில் அகற்று. பித்தனுக்கு இது இடமல்ல. (சேவகன் சாணக்கியனுடைய முடியைப் பிடித்து இழுக்கிறான்.)

**சாணக்கியன்** - சாணக்கியனையா பித்தனென்று ஏசினீர்? செருக்கால் எம்மை அவமதித்தீர். உம்மையும் உமது பூண்டையும் வேரறுத்து நான் வெற்றிமாலை சூடுவதை நீங்கள் காண்பீர்கள். உங்கள் அரசினை அழித்து வெற்றி கொள்ளாவிடில் என்பெயர் **சாணக்கியன்** அல்ல. இச்சிகையை நான் அது வரை முடிய மாட்டேன். (விரைந்து செல்கிறான்.)

**சந்திரகுப்தன்** - (வெளியில் சந்திரகுப்தன் அவனை அணுகி வணங்கி) அந்தணரே! என் விடுதிக்குத் தயை செய்து வருவீர். அன்னமுண்டு இளைப்பாறுவீர்.

**சாணக்கியன்** - அப்பா! உன் அன்பிற்கு மெச்சினேன். வா, போகலாம். (போகிறான்)

காட்சி 4

இடம் – சந்திரகுப்தனுடைய விடுதி. **காலம்** - நண்பகல்.

[சந்திரகுப்தனும் சாணக்கியனும் புசித்த பின் வீற்றிருக்கின்றனர்.]

**சந்திரகுப்தன்** – (தனக்குள்) என் எண்ணம் நிறைவேற இவருடைய அருள் கிடைக்குமா?

**சாணக்கியன்** – அப்பா! உன் அன்பிற்கு மெச்சினேன். உன்னைப்பார்த்தால் அரசர் மரபினைச் சேர்ந்தவன் போல் காண்கிறதே! உன் வரலாறு யாது?

**சந்திரகுப்தன்** – மறையவர் குலதிலகமே! என் பெயர் சந்திரகுப்தன். முந்திய மன்னருக்கு முரா தேவியின் பால் தோன்றிய புதல்வன் யான். என் தாயாதிகளாகிய நவநந்தருடைய கொடூரமான

சூழ்ச்சியினுல் என் உடன் பிறந்தோரைப் பறி கொடுத்துத் தன்னந்தனியனுனேன். தங்கள் வரலாறு யாதோ?

**சாணக்கியன்** - மைந்தா! யான் தென்னுட்டிலுள்ள காஞ்சிமாநகரில் உறையும் ஓர் அந்தணன். பல புண்ணியத் தலங்களைக் காணும் எண்ணத்துடன் வடநாடு வந்துள்ளேன்.

**சந்திரகுப்தன்** - அண்ணலே! என் துயரினை போக்க வல்லவர் தாங்களே!

**சாணக்கியன்** - சந்திரகுப்தா! உன் வல்லமையும் என் சாகஸமும் சேர்ந்திடில் யாவரால் எதிர் நிற்க இயலும்? கவலை கொள்ளதே. இந்த நந்த மரபினை நிர்மூலம் செய்து உன்னையே இந்தச் சாம்ராச்சியத்திற்குச் சக்கரவர்த்தியாக மகுடாபிஷேகம் செய்கிறேன். என்னை அவமதித்த இப் பூண்டுகளை அகற்றி, இவ்வரசினை உனக்கு அளிக்கிறேன். அதனைப் பெற்று, நீதிநெறி வழுவாது ஆண்டு வருவாயாக! இது முக்காலும் உண்மை.

**சந்திரகுப்தன்** - என் விருப்பம் நிறைவேறும் காலம் வந்தது என் பாக்கியமே. அந்தணர்தலைவ! என்னை உமது சீடனுக ஏற்று அருளுவீர்! இனி என் வாழ்வும் தாழ்வும் தங்களைச் சேர்ந்ததே! இனி எனக்குப் பகைவரே இல்லை. எல்லாம் அவன் அருள்!

**சாணக்கியன்** - ஆம். அவனன்றி ஓரணுவும் அசையாதன்றோ? ஆயினும் மதியீனர்களுக்கு அவன் உதவான். நீ துயரம் விடு. உன் துயரத்தை அகற்றி, இவ் வகண்ட சாம்ராச்சியத்தை உனக்கு அளிக்கிறேன். வா, போகலாம். (இருவரும் செல்கின்றனர்.)

1. அரும் பொருள் :-

அண்மை - சமீபம். செருக்கு - கர்வம். மிளிர்கின்றன- பிரகாசிக்கின்றன. அதிதி - விருந்தாளி. ஆசனம் - உட்காரும் இடம். எள்ளல் - கேலிசெய்தல். சிகை - தலை மயிர். அகம்பாவம் - கர்வம்.

2. கேள்விகள் :-

1. சாணக்கியன் பூண்டை யாது செய்தான் ?
2. நந்தமன்னன் சாணக்கியனை ஏன் அவமதித்தான்?
3. சாணக்கியன் செய்த சபதம் என்ன ?
4. சந்திரகுப்தனுக்குச் சாணக்கியன் கொடுத்த வாக்குறுதி என்ன ?

1. பயிற்சி.

1. இந்த நாடகத்தைக் கதைபோல் சுருக்கமாக எழுது.
2. பகற்கனவு, புல்லுருவி, நற்றுணைவர், சாகஸம், நீதிநெறி, சாம்ராச்சியம்-இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.
3. தடித்த சொற்களுக்கு இலக்கணம் கூறு.
சாணக்கியன் சந்திரகுப்தனுக்குத் தைரியம் அளித்தான்.
நான் காஞ்சி வாழ் அந்தணன்.
நீ கவலை கொள்ளாதே.
உருவத்தைக் கண்டு எள்ளாதே.

# 24. செய்யுட் பாடம்

## 1. கலைமகள் துதி

வெள்ளைத் தாமரைப் பூவிலிருப்பாள்
வீணைசெய்யும் ஒலியிலிருப்பாள்
கொள்ளை யின்பம் குலவு கவிதை
கூறு பாவலர் உள்ளத் திலிருப்பாள்
உள்ளதாம் பொருள் தேடி யுணர்ந்தே
ஓதும் வேதத் துண்ணின் றொளிர்வாள்
கள்ள மற்ற முனிவர்கள் கூறும்
கருணை வாசகத் துட்பொருளாவாள்.

—பாரதியார்

## 2. நீதிச் செய்யுள்

i. நீதி வெண்பா :

1. மென்மதுரை வாக்கால் விரும்பும் சகம்; கடின
வன்மொழியினால் இகழும் மண்ணுலகம்;
—நன்மொழியை
ஓதுகுயில் ஏதங் குதவியது? கர்த்தபந்தான்
ஏதபராதஞ் செய்தது இன்று ? [பால்

2. தாமரை பொன்முத்துச் சாமரைகோ ரோசனை
பூமருதேன் பட்டுப் புனுகுசவ்வா—தாமழல்மற்
றெங்கே பிறந்தாலும் எள்ளாரே ; நல்லோர்கள்
எங்கே பிறந்தாலும் என் ?

3. ஈக்கு விடந் தலையில் எய்தும்; இருந்தேளுக்கு
வாய்த்த விடம் கொடுக்கில் வாழுமே ;—நோக்கரிய
பைங்கணரவுக்குவிடம் பல்லளவே; துர்ச்சனருக்
கங்கமுழு தும்விடமே யாம்.

4. கற்பூரம் போலக் கடலுப் பிருந்தாலும்,
கற்பூரம் ஆமோ கடலுப்பு?—பொற்பூரும்
புண்ணியரைப்போல இருந்தாலும், புல்லியர் தாம்
புண்ணியரா வாரோ ? புகல்.

5. கல்லார் பலர் கூடிக் காதலித்து வாழினும், நூல்
வல்லான் ஒருவனையே மானுவரோ?—அல்லாரும்
எண்ணிலா வான்மீன் இலகிடினும், வானகத்தோர்
வெண்ணிலா ஆமோ? விளம்பு.

—ஔவையார்

ii. நல்வழி :

1. ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழும் அன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு.

2. ஆனமுதலில் அதிகம் செலவானால்
மானம் அழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்கும் கள்ளனாய் ஏழ்பிறப்பும் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு.

3. கல்லானே ஆனாலும் கைப்பொருள் ஒன்றுண்டாயின்
எல்லாரும் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும் வேண்டாள் மற்றீன்றெடுத்த தாய்
செல்லா தவன் வாயில் சொல். [வேண்டாள்

4. மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவரும் அங்கில்லை;—சுரந்தமுதம்
கற்றா தரல் போல் கரவா தளிப்பரேல்
உற்றார் உலகத் தவர்.

5. வேதாளம் சேருமே; வெள்ளெருக்குப் பூக்குமே;
பாதாள மூலி படருமே:—மூதேவி
சென்றிருந்து வாழ்வளே; சேடன் குடிபுகுமே
மன்றோரம் சொன்னார் மனை.

—ஔவையார்

iii. நன்னெறி:

1. உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளும் குணமே குணமென்க;—வெள்ளம்
தடுத்தல் அரிதோ? தடங்கரை தான் பேர்த்து
விடுத்தல் அரிதோ? விளம்பு.

2. தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்;—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகின்
நிறையிருளை நீக்குமேல் நின்று.

3. ஆக்கும் அறிவான் அலது பிறப்பினால்
மீக்கொள் உயர்விழிவு வேண்டற்க;—நீக்கு
பவரார் அரவின் பருமணிகண் டென்றும்
கவரார் கடலின் கடு.

4. கைம்மா றுகவாமற் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மா லியலுதவி தாம்செய்வர்—அம்மா!
முளைக்கு மெயிறு முதிர்சுவை நாவிற்கு
விளைக்கும் வலியனதா மென்று.

5. நல்லோர் வரவால் நகைமுகங்கொண் டின்புறீஇ
அல்லோர் வரவா னழுங்குவர்—வல்லோர்
திருந்துந் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்துஞ் சுழல்கால் வா.

—சிவப்பிரகாசர்

iv. **மூதுரை**

1. உற்ற விடத்தில் உயிர் வழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ?—கற்றூண்
பிளந்திருவ தல்லால் பெரும் பாரந் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான்?

2. பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம்—கொண்டபேர்
ஆற்றல் உடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமம் செயல்.

3. கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகை விரித்தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி.

4. வேங்கை வரிப்புலி நோய் தீர்த்த விடதாரி
ஆங்கதனுக் காகார மானாற்போல்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த உபகாரம்
கல்லின் மேலிட்ட கலம்.

5. அற்ற குளத்தி னறுநீர்ப் பறவை போல்
உற்றுழித் தீர்வா ருறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவா ருறவு.

### 3. பல்சுவை

1. **செய்யத்தக்கவை:**

வாலிபந் தனில் வித்தை கற்க வேண்டும்; கற்ற
வழியிலே நிற்கவேண்டும்;
வளைகடல் திரிந்து பொருள் தேடவேண்டும், தேடி
வளரறஞ் செய்யவேண்டும்;

சீலமுடை யோர்களைச் சேரவேண்டும்; பிரிதல்
செய்யாதிருக்க வேண்டும்;

செந்தமிழ்ப் பாடல்பல கொள்ளவேண்டும்; கொண்டு
தியாகம் கொடுக்க வேண்டும்;

ஞாலமிசை பலதருமம் நாட்ட வேண்டும்; நாட்டி
நன்ருய் நடத்த வேண்டும்;

நம்பனிணை யடிபூசை பண்ணவேண்டும்; பண்ணி
ணுலுமிகு பக்தி வேண்டும்;

ஆலமமர் கண்டனே! பூதியணி முண்டனே!
அனக னெமதருமை மதவேள்!

அனுதினமும் மனதில் நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீ சுரதேவனே!

—அறப்பளீசுர சதகம்

2. பொய்யும் மெய்யும்:

மெய்யதைச் சொல்வாராகில்
விளங்கிடும் மேலாம் நன்மை;

வையகம் அவரைக் கொள்ளும்;
மனிதரில் தேவர் ஆவர்.

பொய்யதைச் சொல் வாராகில்
போசனம் அற்ப மாகும்:

நொய்யவர் இவர்கள் என்று
நோக்கிடார் அறிவுள்ளோரே.

—விவேக சிந்தாமணி

3. குடியரசு :

குடிமக்கள் சொன்னபடி குடி வாழ்வு
மேன்மையுறக் குடிமை நீதி
கடியொன்றி லெழுந்தது பார்; குடியரசென்
றுலகறியக் கூறிவிட்டார்!
அடிமைக்குத் தளையில்லை யாருமிப்போ
தடிமையில்லை அறிக என்றார் ;
இடிபட்ட சுவர்போலே கலி விழுந்தான்
கிருத யுகம் எழுக மாதோ!

—பாரதியார்

4. சுதந்தர பாரதம் வாழ்க :

கடலுக்கு நீரினைப் போலவே—இளங்
கதிருக்குப் புன்னகை போலவே
உடலுக்கு நல்லுயிர் போலவே—இந்த
உலகுக்குச் சுடரொளி யாகவே
இடர்களைச் சயமுறத் தாண்டியே—மாந்தர்
இதயத்தில் அருளினைத் தூண்டியே
நடமிடுங் கடவுளின் கருணையால்
நாளுமென் தாய் நிலம் வாழ்கவே !

—யோகி சுத்தானந்த பாரதி

5. குடியரசு வாழ்த்து :

ஆதி பகவன் அறவாழி அந்தணன்
யாதும் உவமையிலான் இன்னருளால்—ஓதுபுகழ்
இந்திய நாட்டில் எழுந்த குடியரசு
சந்ததம் வாழ்க தழைத்து !

—கவிமணி

1. அரும் பொருள் :-

1. கலைமகள் துதி : கொள்ளை -மிகுந்த. கவிதை - பாடல். பாவலர் - கவிஞர். ஒளிர்வாள்-பிரகாசிப்பாள்.

2. (i) நீதிவெண்பா :

1. மதுரம் - இனிமை. சகம் - உலகம். கர்த்தபம் - கழுதை. அபராதம் - தீமை.
2. சாமரை - கவரிமான் மயிர். எள்ளார் - இகழார்.
3. விடம் - விஷம். நோக்குஅரிய - பார்க்கப் பயம் தரும். துர்ச்சனர் - தீயவர்.
4. பொற்பு - அழகு. புல்லியர் - அற்பர்.
5. காதலித்து - விரும்பி. மானுவரோ - ஒப்பாவாரோ. அல்ஆரும் - இரவுகாலத்தில் பொருந்திய. வான்மீன் - நட்சத்திரம். இலகிடினும் - விளங்கினாலும்.

(ii) நல்வழி :

1. அரசுஅறிய - அரசர் அறிந்து போற்றத்தக்க. ஒப்பு - சமம். பழுது - குற்றம்.
2. ஆன - தனக்குரிய. மதி - புத்தி. நாடு - அறிவாயாக.
3. இல்லானை - பொருள் இல்லாதவனை. இல்லாள் - மனைவி. ஈன்று - பெற்று.
4. இரந்து - வேண்டி. அங்கு - மரத்தினடியில். அமுதம் - பால். சுரந்து - மிகுந்து. கற்று - (கற்று ஆ) - கன்றையுடைய பசு. கரவாது - ஒளிக்காமல். உற்றார் - உறவினர்.

5. வேதாளம் - ஒருவிதப் பேய். பாதாளமூலி-ஒரு வகைக் கொடி. சேடன் - பாம்பு. மன்று - நியாயசபை. ஓரம் - பொய்ச் சாட்சி.

(iii) நன்னெறி :

1. கவர்ந்து - தன்வசப்படுத்திக் கொண்டு. தடம் - பெரிய.
2. தீர்வு-நீங்குதல். தளர்ந்து-இரக்கப்பட்டு. வெம் குறைவு-கொடிய குறை. விழுமியோர்-மேலோர்.
3. மீக்கொள் - மேலாகக் கொள்ளும். கடு-விஷம்.
4. கைம்மாறு - பிரதியுபகாரம். எயிறு- பல்.
5. இன்புறீஇ-இன்புற்று. அல்லோர் - கீழ்மக்கள். அழுங்குவார் - வருத்தமடைவார். தேமா - தித்திக்கும் மாமரம். கால் - காற்று.

(iv) மூதுரை :

1. உற்ற - மானக்கேடு நேரிட்ட. உயிர் வழங்கும் - உயிரை விடும். பற்றலர் - பகைவர்.
2. ஆற்றல் - திறமை. கருமம் - வேலை. பண்டு - முதலில்.
3. பொல்லா - அழகில்லாத.
4. விடதாரி - விஷவைத்தியன். கலம் - பாண்டம்.
5. உற்றுழி - துன்பம் வந்த சமயத்தில். தீர்வார் - விலகுகின்றவர். உறுவார் - பொருந்துபவர்.

3. பல்சுவை :

1. வளைகடல் - உலகினைச் சூழ்ந்துள்ள கடல். நம்பன் - கடவுள். ஆலம் அமர்கண்டன் - சிவபெருமான். முண்டம் - தலை. பூதி - விபூதி. மதவேள் - ஒரு உபகாரியின் பெயர்.

2. வையகம் - உலகில் உள்ளோர். நொய்யவர் - அற்பர். நோக்கிடார் - இலட்சியம் செய்யமாட்டார்.

3. கடியொன்றில் - நாழிகையொன்றில்.

4. நடமிடும் கடவுள் - நடராசர்.

5. அறவாழி - தரும சக்கரம். தழைத்து - வளர்ந்து.

## 25. நாட்டு வணக்கம்

வாழிய செந்தமிழ் ! வாழ்கநற் றமிழர் !
வாழிய பாரத மணித் திருநாடு !
இன்றெமை வருத்தும் இன்னல்கள் மாய்க !
நன்மைவந் தெய்துக ! தீதெலாம் நலிக !
அறம் வளர்ந்திடுக ! மறமடி வுறுக !
ஆரிய நாட்டினர் ஆண்மையோ டியற்றும்
சீரிய முயற்சிகள் சிறந்து மிக் கோங்குக !
நந்தேயத்தினர் நாடோறும் உயர்க !
வந்தே மாதரம் ! வந்தே மாதரம் !

—சுப்ரமணிய பாரதியார்

இன்னல் - துன்பம். அறம் - தருமம். மறம் - அதருமம். சீரிய - பெருமை மிகுந்த.